


# அம்புலிமாமா

மாதாமாதம் கதைகள் வாயிலாக இந்திய நாட்டின் கடந்த கால,
தற்கால மேன்மையை விவரிக்கிறது.

வண்ணப்படங்கள் அறுபத்து நான்கு பக்கங்களிலும் மிளிர, புராணங்கள், பழங்கதைகள், வரலாற்று நிகழ்ச்சிகள், பெரியோர்களின் வாழ்க்கை ஆகியவற்றின் அடிப்படையில் அற்புதக் கதைகளையும் மேலும் சீரிய கற்பனைக் கதைகளையும் இன்றைய நிலைக்கு ஏற்ப அளிக்கிறது.

11 மொழிகளிலும் சமஸ்கிருதத்திலும் கூட வெளிவருகிறது.

சந்தா விவரங்களை அறிய முகவரி:
**டால்டன் ஏஜன்சீஸ், 188 என்.எஸ்.கே. சாலை, சென்னை-600 026**

# மங்கை

மார்ச் '95

நாட்டியச் சிறப்பிதழ்

- ✻ உத்தமர் கோயில் -தரிசனம்
- ✻ நடனம் ஒரு யோகசாதனை -வைஜயந்திமாலா சிறப்புப் பேட்டி
- ✻ ஆண்கள் நடனம் ஆடலாமா? -தனஞ்செயன்
- ✻ பத்மினியின் பாராட்டு
- ✻ சித்த மருத்துவ பதில்கள் -டாக்டர் ஆர். கண்ணன்
- ✻ பெருநாள் சிறுகதை - உம்மு ஹபீபா
- ✻ மார்ச் 95 – உங்கள் ராசி பலன்கள்
- ✻ பட்டுப்புடவை பாதுகாப்பு... சில உண்மைகள்
- ✻ திரிவேணி சங்கமம்
- ✻ அமெரிக்காவில் பரதம்
- ✻ முகத்தின் அழகு நகத்திலும்....

ஆன்மிகப் புதிர் பரிசு ரூ. 1000/-

- ✻ ஏராளமான வீட்டு உபயோகக் குறிப்புகள்

விலை ரூ.6/-

**Say "Hello" to text books and friends**
**'Cause School days are here again**
**Have a great year and all the best**
**From Wobbit, Coon and the rest!**






SUPER





# அம்புலிமாமா

மார்ச் 1995



## பொருளடக்கம்






தனிப்பிரதி ரூ. 5-00.

வருட சந்தா ரூ. 60-00.




# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி

## குழந்தைகளுக்கு மனமகிழ்வு



சென்ற இதழில் குழந்தைகளுக்காகத் தொலைக்காட்சி தனி அலைவரிசையில் ஒளிபரப்பு செய்ய வேண்டும் எனக் கூறி இருந்தோம் குழந்தைகள் விழித்திருக்கும் நேரம் குறைவே. அப்படியும் அவர்கள் தொலைக்காட்சிப் பெட்டி முன் தம் நேரத்தைக் கழிக்கிறார்கள். அதில் குழந்தைகளுக்கான நல்ல நிகழ்ச்சிகள் காட்டப் படுகின்றனவா என்பதும் அத்தகைய நிகழ்ச்சிகளைத் தயாரிக்க முடியுமா என்பதுமே கேள்வி.

குழந்தைகளுக்காக இந்தியாவில் தயாரிக்கப்படும் படங்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். அவ்வளவு குறைவு அவை. பல்கேரியா போன்ற சிறுநாட்டில் கூட ஆண்டிற்கு 40 குழந்தைக்கான திரைப்படங்கள் தயாரிக்கப்படுகின்றன.



குழந்தைகளுக்கான படங்கள் தயாரிக்க தமக்கு நல்ல கதைகள் கிடைக்கவில்லை என்று தயாரிப்பாளர்கள் கூறுகிறார்கள். ஏன் இல்லை? நம் புராணங்களிலும் நாட்டுபுறக் கதைகளிலும் ஐயாயிரம் வருட நாட்டு வரலாற்றிலும் எவ்வளவோ உள்ளன. ஏன் நல்ல எழுத்தாளர்களின் நல்ல படைப்புகளும் உள்ளன. குழந்தைத் திரைப்படங்களைத் தவிர தொலைக்காட்சியில் விளையாட்டு, விஞ்ஞானம், புதிய கண்டுபிடிப்புகள், சுற்றுலா இடங்கள் ஆகியவற்றையும் பார்க்க விரும்புகிறார்கள். எனவே நல்ல உபயோககரமான வற்றைத் தொலைக்காட்சியில் காட்டினால் குழந்தை களின் மனம் மகிழும்.

மதிமுகம் : 96 மார்ச் 1995 புன்னகை : 3

தனிப்பிரதி : ரூ. 5.00 வருட சந்தா : ரூ. 60.00



## செய்திகளும் தகவல்களும் :

# முடிந்த ஆயிரம் நாள் போர்

புத்தாண்டு வரும்போது மாதா கோவில்களில் மணிகள் அடிப்பதற்கு பதிலாக போஸ்னியா ஹர்ஜ்கோனாவில் துப்பாக்கி குண்டுகள் வெடிக்கும் சத்தமே கேட்டது. இது சில மாதங்களாக நடந்து கொண்டிருந்ததால் அங்கு மக்கள் இதுபற்றி வியப்படையவில்லை. திடீரென ஒருநாள் துப்பாக்கி குண்டுகள் வெடிக்கும் சத்தம் கேளாமல் போகவே அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

யுகோஸ்லாவியா பெடரேஷனிலிருந்து ஸ்லோவேனியா, க்ரோஷியா, மேசிடேனியாவுடன் போஸ்னியாவும் ஹர்ஜ்கோவினாவும் பிரிந்து போனதிலிருந்து மூன்று ஆண்டுகளுக்கு முன் போர் தொடங்கியது. இப்போது செர்பியா, மாண்டிநீக்ரோ ஆகிய இரண்டும்தான் யுகோஸ்லாவியா பெடரேஷனில் உள்ளன.

மாசிடோனியாவைத் தவிர மற்ற மூன்றிலும் சண்டை சச்சரவுகள் நடந்தே வந்தன. யுகோஸ்லாவியா ராணுவத்தில் செர்பியர்களே அதிகம். போஸ்னியா ஹர்ஜ்கோவினாவில் 33 மாதங்கள் தீவிரமாய்ப் போர் நடந்தது. இரண்டாவது உலகப் போருக்குப் பின் நீண்ட நாட்கள் நடந்த போர் இதுவே.

பெரும்பான்மையினரான முஸ்லீம்களுடனும் சிறுபான்மையினரான கிருஸ்துவர்களுடனும் செர்பியர்கள் மோதி வருகிறார்கள். தலைநகர் சரோஜிவோ விமான தளத்தை செர்பியர்கள் கைப்பற்றிய பின் ஐக்கிய நாடுகள் சபையின் அமைதிப் படை அங்கு செயல்பட முடியாமல் போயிற்று. மோதல்கள் அதிகரிக்க உணவுப் பொருள்கள் கிடைப்பதே அரிதாயின.

ஐந்து வல்லரசுகள் அமைதிக்கான பல யோசனைகளை முன்வைத்தும் போரிடுவோர் அவற்றை நிராகரித்தனர். 49 சத நிலப்பரப்பு செர்பியர்களுக்கு என்றும் மீதம் மற்றவர்களுக்கு என்றும் வல்லரசுகள் கூறிய யோசனையை முஸ்லீம் அரசாங்கம் ஏற்றது. இதை க்ரோட் மக்களும் ஏற்றனர்.

ஐ.நா. படையில் சென்ற அமெரிக்கர்களை செர்பியர்கள் தாக்கவே அமெரிக்கா போஸ்னியாவுக்கு ஆயுதங்களைக் கொடுக்கப் போவதாக மிரட்டியது. அப்போது செர்பியர்கள் முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி ஜிம்மி கார்டரின் உதவியை நாடினார்கள். அவர் முஸ்லீம் தலைவர்களுடனும் செர்பியர்களுடனும் பேசி செர்பியர்கள் ஐந்து வல்லரசுகளின் யோசனையை ஏற்குமாறு கோரினார்.

ஒரு வாரத்திற்குப் பின் டிசம்பர் 31ல் இரு தரப்பினரும் ஒரு உடன்பாட்டிற்கு வந்தனர். நான்கு மாத காலத்திற்கு மோதல்களை நிறுத்தி மே மாத வாக்கில் வல்லரசுகளின் யோசனை பற்றி முடிவு செய்யலாம் எனத் தீர்மானிக்கப்பட்டது. இவ்வாறு சுமார் ஆயிரம் நாட்கள் நடந்த போருக்குப் பின் போஸ்னியாவில் அமைதி நிலவ ஆரம்பித்து விட்டது.







# யார் துணிச்சல்காரன்?

சீனய்யன் என்பவனுக்குத் தன் கிராமத்திலுள்ள பார்வதியை மணந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை. ஆனால் அவளோ யார் ஒரு வைர மாலை கொண்டு வந்து தனக்குக் கொடுப்பானோ அவனைத்தான் மணக்கப் போவதாகக் கூறிவிட்டாள். வைரமாலை வாங்க ஆயிரம் வராகன்கள் வேண்டுமே! அதற்கு சீனய்யன் எங்கே போவான்?

சீனய்யன் நிறையப் பணம் சம்பாதிக்க வேண்டுமென்றால் வேலை செய்ய வேண்டுமே. அதனால் சமையல் செய்ய அவன் கற்றுக் கொண்டான். ஆனால் அதில் கிடைத்த பணம் அவனது வாழ் நாளைக் கழிக்கத் தான் போதுமானதாக இருந்தது. பணம் எதுவும் மிச்சப்படுத்த முடியவில்லை. இந்த நிலையில் அவன் எப்படிப் பார்வதியை மணக்க முடியும்?

அப்போது அந்நாட்டு மன்னன் ஒரு அறிவிப்பைச் செய்தான். உயரிய துணிகரச் செயல் புரிபவனுக்கு பத்தாயிரம் வராகன்கள் அளிக்கப் படும் என்பதே அந்த அறிவிப்பு. இதைக்கேட்ட சீனய்யன் எப்படி யாவது ஒரு துணிகரச் செயலை செய்துவிட வேண்டும் என நினைத் தான். ஆனால் தவளையைக் கண் டாலே பயந்து தலைதெறிக்க ஓடு பவனாயிற்றே. அவனால் என்ன துணிகரச் செயல் புரிய முடியும்?

அவன் அக்கிராமத்திலுள்ள கிழக் குப்பண்ணனிடம் யோசனை கேட்கச் சென்றான். அவன் "பயம் மனிதனின் எதிரி. பயமில்லாதவன்தான் சாதனைகள் புரிய முடியும். நீ சந்திரபுரம் போய் அங்கு மலைக் குகையிலுள்ள யோகியைப் பார். அவர் உன் பயத்தைக் குறைத்து துணிச்சல் வர மூலிகை ஏதாவது கொடுப்பார்"

-சிவனார் செல்வன்-

என்றான்.

உடனே அவன் அங்கிருந்து நேராகபார்வதியின் வீட்டிற்குப் போய் அவளைக் கண்டு "நான் சந்திரபுரம் போய் அங்குள்ள யோகியிடம் துணிச்சல் வர மருந்து வாங்கிச் சாப்பிடப் போகிறேன். பின்னர் துணிகரச் செயல்புரிந்து அரசாங்க பரிசு பெற்று உனக்கு வைரமாலை வாங்கி வரப் போகிறேன்" என்றான்.

பார்வதி சிரித்து "நீ இனிமேல் தான் சந்திரபுரம் போகப் போகிறாய். உன்னை முந்திக் கொண்டு நஞ்சன் தலைநகருக்குப் போய் விட்டான். உங்கள் இருவரில் யார் வைர மாலையை முதலில் கொண்டு வருகிறாரோ அவரைத்தான் மணந்து கொள்வேன்" என்றாள்.

நஞ்சனும் பார்வதியைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பினான். அவன் துணிச்சல் கொண்டவன். பாம்பைக் கையால் பிடித்து விடுவான். இருட்டில் பயமில்லாமல் எங்கும் செல்வான். இப்படிப்பட்டவனுடன் போட்டி போட்டுத் தான் பார்வதியை அடையவேண்டும் என சீனய்யன் நினைத்து சந்திபுரத்திற்குப் போய் யோகியைக் கண்டான். அவரும் "உனக்கு வேண்டிய மூலிகை அந்த குகைக்குள் இருக்கிறது. நீயே போய் எடுத்துக் கொள்" என்றுகூறி ஒரு குகையைக் காட்டினார்.

சீனய்யன் அக்குகைக்குள் எட்டிப் பார்த்தபோது தவளைகள் கத்துவ



தைக் கேட்டான். அவன் பயந்து யோகியிடம் வந்து "சுவாமி! குகைக்குள் ஒரே தவளைகளாக இருக்கின்றனவே. எப்படிப் போவேன்" என்று கேட்டான். அவரும் "தவளைகள் பாம்புகளல்ல. நீ போய் மூலிகையை எடுத்துக் கொள்" என்றார். சீனய்யனும் வேறு வழியின்றி குகையை நோக்கிச் சென்றான்.

அப்போது அவன் எதிரே ஒரு குதிரை வண்டி வந்தது. அதில் பயில்வான் பலராமனின் மகள் பாக்யா வந்து கொண்டிருந்தாள். அவள் சீனய்யனைக் கண்டு வண்டியை நிறுத்தினாள். அவள் மண்டைக் கர்வம் பிடித்தவள். அதனால்தான் இருபது வயதாகியும் அவளுக்குக்



கல்யாணம் நடக்காமல் இருந்தது.

அவள் சீனய்யனைப் பார்த்து "நான் பயில்வானின் மகள். நான் உன்னை மணக்க விரும்புகிறேன்" என்றாள். சீனய்யனோ "நான் பார்வதியைத் தவிர யாரையும் மணக்க மாட்டேன்" என்றான். பாக்யா அவனிடமே பார்வதியைப் பற்றி விசாரித்து தெரிந்து கொண்டு "நீ பைத்தியக்காரன். ஒருவேளை சாப்பாட்டிற்குத் தாளம் போடும் பார்வதியையா மணந்து கொள்ளப் போகிறாய்? மரியாதையாக என்னை மணந்து கொள்" என்று மிரட்டினாள்.

அப்போது ஒரு வெட்டுக்கிளி துள்ளி அவன் மீது விழுந்தது. சீனய்யன் பயந்து அலறினான். பாக்யாவோ "நீ என்னைக் கல்யாணம் செய்து கொள்ளாவிட்டால் வெட்டுக்கிளிகள் நிறைந்த அறைக்குள் உன்னைத் தள்ளி விடுவேன்" என்று மிரட்டினாள். அதைக்கேட்டு பயந்து சீனய்யன் தலைதெறிக்க ஓடினான். அவள் தன் வண்டியை ஓட்டி சீனய்யனைத் துரத்தலானாள்.

அப்போது அவ்வழியே வந்த நஞ்சன் அவளது வண்டியை நிறுத்தி விஷயம் என்ன என்று கேட்டான். அவளும் எல்லாம் விவரமாகச் சொன்னாள். அதைக்கேட்ட நஞ்சன் "வெட்டுக்கிளியைக் கண்டு பயப்படுபவனையா ஒரு பயில்வானின் மகள் மணந்து கொள்வது? இதைக்கண்டு எல்லோரும் சிரிப்பார்களே!" என்றான்.

அதுகேட்டு பாக்யா "ஆமாம். நீ சொல்வதே சரி. நான் இவனை மணந்து கொள்ள மாட்டேன்" எனக் கூறி வண்டியை ஓட்டிக்கொண்டு போய்விட்டாள். சீனய்யன் நஞ்சனுக்குத் தன் நன்றியைத் தெரிவித்தவாறே "நீ தலைநகரத்திலிருந்தா வருகிறாய்? என்ன துணிகரச் செயல் செய்தாய்?" என்று கேட்டான்.

நஞ்சன் "நான் ஒரே சமயத்தில் இரண்டு முதலைகளுடன் நீரில் போராடி வெற்றி பெற்றேன். மன்னரும் எனக்கு பத்தாயிரம் வராகன்கள் பரிசளித்தார். நான் ஒரு அழகான வைரமாலையும் நிறையப் பணம் கொடுத்து வாங்கி விட்டேன். இனி

நான் பார்வதியை மணந்து கொள்வேன்" என்று கூறிக் கொண்டிருக்கும் போதே ஒரு மரத்திலிருந்து ஒரு வலை அவர்கள் மீது விழுந்தது. அவர்கள் அதில் அகப்பட்டுக் கொண்டார்கள்.

அப்போது நான்கு திருடர்கள் மரத்தின் மீதிருந்து குதித்து நஞ்சனிடமிருந்த வைரமாலையையும் பணத்தையும் பறித்துக் கொண்டு போய் விட்டார்கள். சீனய்யனும் நஞ்சனும் பெருமூச்சு விட்டு வலையிலிருந்து வெளியே வந்தார்கள்.

நஞ்சனும் "நான் இப்போதே ஓடி அந்தத் திருடர்களைப் பிடித்து வைரமாலையை எடுத்து வருகிறேன். நீ முன்னதாகப் போய் பார்வதியிடம் நான் வைரமாலையோடு வந்து கொண்டிருப்பதாகச் சொல்" என்று கூறிவிட்டுத் திருடர்கள் போன வழியில் ஓடினான். சீனய்யன் தன் ஊருக்குச் சென்றான்.

அவன் அங்கு பார்வதியிடம் நடந்ததை எல்லாம் கூறினான். அது கேட்டு அவள் "நான்கு திருடர்களைப் பிடிக்க அவன் ஒருவனே தனியாகப் போனானா? என்ன துணிச்சல்க்காரன்!" என்று கூறி ஆச்சரியப்பட்டாள்.

இனி அவள் நஞ்சனைத்தான் கல்யாணம் செய்து கொள்வாள் என்று சீனய்யன் உறுதியாக நம்பினான். ஆனாலும் அவன் சற்று தைரியமாக "ஆமாம். இந்த கல்யா



ணத்திற்கும் வைரமாலைக்கும் என்ன சம்பந்தம்? உனக்குப் பணம் முக்கியமா? அன்பு முக்கியமா? நான் வைரமாலை கொண்டு வரவில்லை தான். ஆனால் நீதான் எனக்கு வேண்டும். என்னையே மணந்து கொள்" என்று கூறினான்.

பார்வதியும் "எனக்கும் உன்னைப் பிடித்திருக்கிறது. இப்போது சொன்னதை நீ முன்பே சொல்லி இருந்தால் இவ்வளவு சிரமப்பட்டிருக்க வேண்டாம். சரி. இப்போதாவது துணிச்சல் உனக்கு வந்ததே. உன்னைத்தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்" என்றாள்.

சீனய்யன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அப்போது நஞ்

சன் வைரமாலையுடன் அங்கு வந்து சேர்ந்தான். அப்போது பார்வதி அவனிடம் "நீ தாமதித்து வந்தாய். சீனய்யன் உனக்கு முன் துணிகரச் செயலைச் செய்து விட்டான். எனவே அவனைத்தான் மணந்து கொள்ளப் போகிறேன்" என்றாள்.

"இவனா என்னைவிட துணிகரச் செயலைப் புரிந்தான்?" என்று நஞ்சன் கேட்கவே பார்வதியும் "துணிகரச் செயல் என்றால் குதித்து சண்டையிட்டுச் செய்வதுதான் என்பதல்ல. எதையும் சொல்லத் துணிச்சல் வேண்டும். இவன் எனக்காக பயில்வானின் மகள் பாக்யாவை வேண்டாமென்று உதறித் தள்ளினான். அதனால் வரப் போகும் ஆபத்தைத் துணிச்சலுடன் எதிர்க்கத் தயாராக இருக்கிறான்! என்னிடமே துணிச்சலுடன் திருமணம் பற்றிப் பேசினான். உண்மையில் கல்யாணத்திற்கு நிபந்தனை எல்லாம் எதற்கு? வைரமாலைக்காக உன்னை கல்யாணம் செய்து கொண்டால் அது வியாபாரமாகும்" என்றாள்.

நஞ்சனும் "நீ சொல்வது சரியே. நான் நினைத்த விதத்தில் துணிகரச் செயல் என்பதே வேறு விதம். ஆனால் அவன் பயில்வானின் மகளை மணக்க முடியாது என்றும் உன்னைத் தான் மணக்கப் போவதாயும் பாக்யாவிடம் கூறிவிட்டான். பாக்யாவின் மிரட்டலுக்கும் மசியவில்லை. உன்னிடப் பயமில்லாமல் கூறினான். சீனய்யன் செய்ததை இதற்கு முன் ஒரு துணிகரச் செயல் என்று நினைத்ததே இல்லை. ஏன் எனக்கே இதை உன்னிடம் சொல்லத் துணிச்சல் வரவில்லையே. அதனால் சீனய்யனே என்னைவிடத் துணிச்சல்காரன்" என்றான்.

சீனய்யனும் "ஆமாம். நான்தான் துணிச்சல்காரன். எனவே எனக்கும் பார்வதிக்கும் கல்யாணம். நீ அந்த பாக்யாவை மணந்து கொள் அவளும் உன்னை ஏற்பாள்" என்றான். அப்படியே இரு விவாகங்களும் நடந்தன.





# மீன் வேட்டை

பட்டணம் போய்க் கொண்டிருந்த பரமன் வழியில் ஒரு குளக்கரையில் ஒரு விசித்திரக் காட்சியைக் கண்டான். இருவர் இருமுகம் பார்க்கும் கண்ணாடிகளைச் சூரியனுக்கு நேராகக் காட்டி அந்த ஒளியைக் குளத்தில் விழச் செய்து கொண்டிருந்தார்கள்.

இது என்ன வேடிக்கை எனப் பார்க்க பரமன் அவர்களை அணுகிய போது அந்த இருவரில் ஒருவன் தன் ஊரைச் சேர்ந்த மணி என்பது தெரிந்தது. மற்றவன் கட்டுமஸ்தான உடலோடு கடாமீசையும் கொண்டிருந்தான்.

பரமன் அவர்களிடம் "இதென்ன வேடிக்கை? நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டான். மணி பதில் சொல்லவில்லை ஆனால் மீசைக்காரன்" நாங்கள் மீன் பிடிக்கிறோம்" என்றான்.

அதைக் கேட்ட பரமன் "வேடிக்கையாக இருக்கிறதே. மீன் பிடிக்கிறீர்களா? வலையோ, தூண்டிலோ இல்லாமல் எப்படி மீன் பிடிக்கிறீர்கள்?" என்று கேட்டான். மீசைக்காரனும் "மீன் பிடிக்க ஒரு புது வழி கண்டு பிடித்திருக்கிறேன். இதைத் தெரிந்து கொண்டால் அதைப் பிடிக்க வலையோ தூண்டிலோ தேவை இல்லை" என்றான்.

பரமன் அது கேட்டு மேலும் ஆச்சரியப்படவே மீசைக்காரன் சற்றுக் கடுப்புடன் "இதை என் தாத்தா விடமிருந்தும் தந்தையிடமிருந்தும் நான் கற்றேன். யாருக்கும் இதை லேசில் சொல்லி விடமாட்டேன். இதோ பார். இவன் என்னிடம் இந்த முறையைக் கற்றுக் கொண்டு எனக்கே போட்டியாக இங்கு மீன் படிக்க வந்து விட்டான். உனக்கு அந்த ரகசிய முறை தெரிய வேண்டுமானால் நீ எனக்கு ஐம்பது

-எஸ். சோபினி-

ரூபாய் கொடு" என்றான்.

பரமனும் அந்த ரகசியத்தைத் தெரிந்து கொள்ள ஆவல் கொண்டு ஐம்பது ரூபாயை எடுத்து மீசைக் காரனிடம் கொடுத்தான். அவன் அதை வாங்கிக் கொண்டு "ரகசியம் இந்தக் கண்ணாடியில் தான் உள்ளது. இந்தக் கண்ணாடியைப் பிடித்துக் கொண்டு ஆடாமல் அசையாமல் நின்று சூரிய ஒளிக்கதிரை குளத்து நீரில் ஒரே இடத்தில் விழச் செய்தால் சூரிய வெப்பம் தாங்க முடியாமல் மீன்கள் நீர்மட்டத்திற்கு மேல் வந்து விடும். அப்போது அவற்றைப் பிடித்துக் கரைக்குக் கொண்டு வந்து விடலாம்" என்றான்.

பரமனும் "ஓ! இப்படி இதுவரை எவ்வளவு மீன்களைப் பிடித்தீர்கள்?" என்று சந்தேகப்பட்டவனாய்க் கேட்டான், மீசைக்காரன் சிரித்து கொண்டே "உன்னையும் சேர்ந்து ஆறு" என்றான். அது கேட்டுப் பரமன் "இதென்ன புது வித மோசடி" என்று கத்தினான்.

மீசைக்காரனும் "சும்மா கத்தாதே. உன் போல இன்னொரு மீன் வந்து சிக்கும் வரை நீ இந்தக் கண்ணாடியைப் பிடித்துக் கொண்டிரு" என்று கூறிவிட்டு மணியிடம் "இந்தா இருபத்தைந்து ரூபாய். நீ போகலாம்" என்று கூறி அவனை அனுப்பிவிட்டான்.

அரைமணி நேரம் கழிந்தது. மணி நான்கு பேர்களுடன் வருவதைப் பார்த்த மீசைக்காரன் "ஓ! நான்கு மீன்கள் கிடைக்கின்றனவா? நூறு ரூபாய் வருமானம் கிடைக்கும்"என எண்ணி மகிழ்ந்தான். ஆனால் பரமனோ "வருபவர்கள் தடிகளோடு வருகிறார்கள் இது வரை நீ வசூல் செய்த பணத்தை மரியாதையாகக் கொடுத்து விடு. இல்லாவிட்டால் உன் கை கால்களை ஒடித்துப் போட்டு விட்டுப் போய் விடுவார்கள்" என்றான்.

மீசைக்காரன் பயந்து போய் தன்னிடமிருந்த பணத்தை எல்லாம் பரமனிடம் கொடுத்துவிட்டு ஓடிவிட்டான்.






*(ட்ராய் மன்னனின் மகன் மோகன் புவனசுந்தரியைக் கவர்ந்து வந்ததால் கிரேக்கர்கள் தங்கள் கப்பற்படையுடன் ட்ராயைத் தாக்க வந்தார்கள். முதல் நாள் போரில் ட்ரோஜன்கள் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் தம் நகருக்குள் ஓடி விட்டார்கள். கிரேக்கப் படைகள் ட்ராய் நகரை முற்றுகையிட்டுக் கொள்ளை அடித்தனர். இந்த முற்றுகை ஒன்பது ஆண்டுகள் நடந்தது. இந்தக் காலத்தில் பெரிய போர் எதுவும் நிகழவில்லை. அவ்வப்போது சிறு மோதல்கள் நிகழ்ந்தன. பிறகு-)*

கிரேக்கர்கள் ட்ராய் நகரை முற்றுகையிட்டு ஒன்பது ஆண்டுகள் முடிந்து விட்டன. குளிர்காலம் வந்து விடவே போர் நடக்கவில்லை. அதனால் கிரேக்கர்கள் தம் ராணுவக் கூடாரங்களை விரிவாக்கி அம்பு எய்வதில் மேலும் பயிற்சி செய்து பழகினார்கள்.

போர்க்களத்திற்குச் சற்று தூரத்தில் சூரிய தேவனின் ஆலயம் இருந்தது. இது நடுநிலைமைப் பகுதியில் இருந்ததால் தேவனுக்கு பலி கொடுக்க கிரேக்கர்களும் ட்ரோஜன்களும் அங்கு போய் வழிபட்டு வந்தார்கள். சில சமயங்களில் இவர்கள் ஒருவரையொருவர் சந்திப்பதும் உண்டு.

ஒருநாள் வச்சிரகாயன் அந்த ஆலயத்திற்குப் பலியிடச் சென்றபோது வர்த்தனனின் மனைவியும் மகளையும்




கண்டான். அவர்களும் தேவனுக்குப் பலியிடவே வந்தனர். வர்த்தனனின் மகள் பிரமோதினி மிக அழகானவள். அவளைப் பார்த்ததும் வச்சிரகாயன் மயங்கி விட்டான். அவன் தன் கூடாரத்திற்குத் திரும்பிச் சென்று ஒரு தூதனை வீரசிம்மனிடம் அனுப்பினான். அத்தூதனும் வீரசிம்மனிடம் "வச்சிரகாயன் உன் தங்கையை மணக்க விரும்புவதாகத் தெரிவிக்கச் சொன்னார்" என்று கூறினான்.

வீரசிம்மன் அத்தூதன் வாயிலாக வச்சிரகாயனுக்கு "நீ கிரேக்கர்களை விட்டு என் தந்தை வர்த்தனரின் பக்கம் வந்துவிட வேண்டும். அப்படி கிரேக்கர்களுக்கு துரோகம் செய்ய மனம் இல்லையானால் குறைந்தது பூதவனையும் அவனது சில வீரர்களையும் கொல்வதாகச் சத்தியம் செய்து கொடுக்க வேண்டும்" எனப் பதில் சொல்லி அனுப்பினான்.

வச்சிரகாயனுக்கு இந்த நிபந்தனை ஏற்க மனமில்லை. இதற்குள் குளிர் காலமும் முடிந்து விட்டது. வசந்தம் வந்தது. அதனால் போரும் ஆரம்பமாகியது.

போரின் போக்கைக் கண்டால் தேவதைகள் கிரேக்கர்களின் பக்கம் இருப்பதாகத் தெரியவில்லை. வச்சிரகாயன் பல இடங்களில் கொள்ளை அடித்தபோது பல பெண்களை அடிமைகளாகப் பிடித்து வந்தான். அவர்களில் ஒருத்தி ஹேமா. இன்னொருத்தி பாமினி. கிரேக்கர் இந்த அடிமைகளைப் பகிர்ந்து கொண்டபோது ஹேமா ராஜராஜனுக்கும் பாமினி வச்சிரகாயனுக்கும் கிடைத்தார்கள்.

ஹேமாவின் தந்தை ஹேமாம்பரன். அவன் சூரியதேவனை வழிபடுபவன். அவன் தன் மகளை விடுவித்து அழைத்து வர பல பொருள்களை ராஜராஜனுக்குக் காணிக்கையாக அளிக்க எடுத்து சென்றான். ஆனால் ராஜராஜன் அவனது வேண்டுகோளை ஏற்கவில்லை.

ராஜராஜன் ஹேமாம்பரனை திட்டி வீட்டை விட்டுத் துரத்தி விட்டான். இந்த சம்பவம் நடந்த நாளிலிருந்து கிரேக்க முகாமின் மீது எங்கிருந்தோ அம்புகள் வந்து பாயலா



யின. இதனால் கிரேக்க வீரர்கள் நூற்றுக்கணக்கில் இறந்தனர். இப்படிப் பத்து நாட்கள் நடந்தன. அப்போது கப்பல்களுக்கு வழிகாட்டி அழைத்து வந்த காரகன் ஒரு விஷயத்தைக் கூறினான்.

"ஹேமாம்பரன் சூரியதேவனை ஆராதிப்பவன். எனவே அவனைத் திட்டிய ராஜராஜனை சூரியதேவன் தான் இப்படி தண்டிக்கிறான். இது ஹேமாம்பரனின் வேண்டுகோளால் தான் நடைபெறுகிறது. எனவே ஹேமாவை மரியாதையுடன் ஹேமாம்பரனிடம் ஒப்படைத்தால்தான் இந்த விபத்திலிருந்து தப்ப முடியும்" என்றான்.

இதைக் காரகன் கூறிய உடனேயே ஹேமாம்பரனிடம் ஹேமாவை ராஜராஜன் அனுப்பியதோடு வச்சிரகாயனிடம் இருந்த பாமினியை அவனிடம் கேளாமலே அழைத்து வந்து விட்டான். இதைக் கண்டு வச்சிரகாயனுக்கு ஆத்திரம் வந்தது.

அவன் உடனேயே "இனிமேல் எனக்கும் இந்தப் போருக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. நான் இதில் கலந்து கொள்ள மாட்டேன்" என்று தீர்மானித்துக் கொண்டான். அவன் பிரமோதினியை மிகவும் விரும்பியதால் அவளது தந்தை வர்த்தனனைத் திருப்திப்படுத்த இப்போது நல்ல வாய்ப்பு கிடைத்தது. அதனால் வச்சிரகாயனோடு அவனது வீரர்களும் போர்க்களம் செல்லவில்லை.

வச்சிரகாயன் இனிமேல் கிரேக்கர்களுடன் இருந்து போர்புரிய மாட்டான் என்ற செய்தி ட்ரோஜன்களுக்குக் கிடைத்தது. அதனால் அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. அவர்கள் உற்சாகம் அடைந்து கிரேக்கர்களைக் கடுமையாகத் தாக்கலானார்கள். அதுகண்டு ராஜராஜன் வெலவெலத்துப் போனான். போர் நிறுத்தம் பற்றிப் பேச அவன் ட்ரோஜன்களுக்குத் தூது அனுப்பினான்.

போரும் நின்றது. அந்தப் போரே புவனசுந்தரிக்காக என்பதால் புவனசுந்தரின் கணவனான பிரதாபனுக்கும் அவளைக் கவர்ந்து வந்த மோகனுக்கும் இடையே மற்போர் நடத்திப் பிரச்னையை தீர்த்துக் கொள்ளலாம்



எனத் தீர்மானித்திருப்பதாக பதில் அனுப்பினான். வீரசிம்மன் மற்போர் புரிய கிரேக்கர்கள் பூதவனைத் தேர்ந் தெடுத்தார்கள்.

வீரசிம்மனும் பூதவனும் சூரியன் மறையும் வரை மற்போர் புரிந்தும் யாருக்கும் வெற்றி, தோல்வி என்பது ஏற்படவில்லை. மாலையாகி இருட் டும் போது போர் நின்றது.

இருதரப்பினரும் அப்போதைக் குப் போர் நிறுத்த ஒப்பந்தம் செய்து கொண்டனர். கிரேக்கர்கள் தம் போர்க் கருவிகளை மறைத்த வைத்து ஒரு மதில் சுவரை எழுப்பினார்கள். அச்சுவருக்கு முன் ஒரு பெரிய பள்ளம் தோண்டினார்கள்.

மீண்டும் போர் ஆரம்பமாகியது. அதில் கிரேக்கர்கள் படுதோல்வி அடைந்தார்கள். ட்ரோஜன்கள் அவர் களை அவர்கள் கட்டிய மதில் சுவ ருக்கு அப்பால் விரட்டி அடித்தார் கள். அன்றிரவு ட்ரோஜன்கள் கடற் கரைக்கு வந்து கிரேக்க முகாமின் அருகிலேயே தங்கினார்கள்.

கிரேக்கப் படையின் சேனாதிபதி யான ராஜராஜன் எப்படியாவது வச்சிரகாயனைப் போரில் ஈடுபடுத்த வேண்டும் என நினைத்தான். அவன் இல்லாவிட்டால் கிரேக்கர்களுக்குத் தோல்விதான் என அவன் உணர்ந் தான். எனவே வச்சிரகாயனுடன் பேச ராஜராஜன் ரத்தவர்ணனையும், பூதவனையும், ரூபதரனையும் மற்றும் இருவரையும் அனுப்பினான். பல

என்று முடிவு செய்யப்பட்டது. பிரதா பனும் மோகனும் மற்போர் புரிந் தார்கள். ஆனால் இது முழுமை யாக நடக்கவில்லை. மத்தியிலேயே மோகன் மாயமாய் மறைந்து போனான். இது காமினி தேவதை யின் வேலை.

மற்போர் சரியாக நடக்காததால் போர் நிறுத்தம் மீறப்பட்டது. கண்ட கன் என்ற வீரன் பிரதாபன் மீது அம்பு எய்தான். அதுகண்டு தேவ மயன் கோபம் கொண்டு கண்ட கனைத் தாக்கிக் கொன்றான்.

அப்போது வீரசிம்மன் வச்சிர காயனைத் தன்னோடு மற்போர் புரிய அழைத்தான். ஆனால் வச்சிர காயன் தான் போர் புரிவதில்லை



பரிசுப் பொருள்களையும் அனுப்பி அவன் "நீ உன் பாமினியை அழைத்துச் செல். போர்புரிய வா" என்று தெரிவிக்கச் சொன்னான்.

இதற்குக் காரணம் ஹேமா தன் தந்தையோடு இருக்க விரும்பாமல் மறுபடியும் ராஜராஜனிடமே வந்து விட்டதுதான். வச்சிரகாயன் வந்தவர்களிடம் சுமுகமாகப் பேசினான். ஆனால் போரில் கலந்து கொள்வதில்லை என்ற தன் முடிவை அவன் மாற்றிக் கொள்ளவில்லை. மறுநாளே தானும் தன் படையும் கப்பலேறிப் போய்விடப் போவதாகவும் அவன் பதில் கூறி அனுப்பினான்.

அன்றிரவே ரூபதரனும் தேவமயனும் ட்ரோஜன்களைத் தாக்கக் கிளம்பிச் சென்றனர். வழியில் அவர்கள் ட்ரோஜன்கள் அனுப்பிய தூதன் ஒருவனைக் கண்டனர். அவனை அவர்கள் தாக்கி படை ரகசியங்களை அவனிடமிருந்து தெரிந்து கொண்டு அவனை கொன்று விட்டார்கள்.

அந்தத் தூதன் ஒரு முக்கியமான ரகசியத்தை அவர்களிடம் கூறிவிட்டான். விச்சேதனன் என்ற த்ரெஸ் நாட்டு மன்னன் தன் படைகளோடு ட்ரோஜன்கள் பக்கம் வந்து சேர்ந்து விட்டதாயும் அவனது பால் போன்ற வெள்ளைக் குதிரைகளை அங்கு விட்டிருக்கிறான் என்பதே அந்த ரகசியம். அந்தக் குதிரைகள் காற்றை விட வேகமாகப் போகக் கூடியவை. அவை ட்ராய் நகரில் மேய்ந்து அந் நகருக்குத் தெற்கே பாயும் ஸ்காமந்தர் நதியின் தண்ணீரைக் குடித்து விட்டால் ட்ராயை யாராலும் வெல்ல முடியாது என்று ஒரு கருத்து நிலவி வந்தது.

விச்சேதனின் குதிரைகள் இந்த இரு வேலைகளையும் இன்னமும் செய்யவில்லை. விச்சேதனன் ட்ரோஜன்களின் முகாமில் அன்றிரவு வலது புறமுள்ள கூடாரம் ஒன்றில் இருப்பதையும் அந்த தூதனிடமிருந்து ரூபதரனும் தேவமயனும் அறிந்திருந்தார்கள். அவர்கள் விச்சேதனன் தங்கி இருந்த கூடாரத்திற்குச் சென்றார்கள்.

ஆழ்ந்த தூக்கத்தில் விச்சேதனன் இருந்தான். ரூபதரனும் தேவமயனும்

அவனையும் அவனது பனிரெண்டு ஆட்களையும் கொன்றனர். மேலும் விச்சேதனன் கொண்டு வந்த வெள்ளைக் குதிரைகளை அவிழ்த்து ஓட்டிக் கொண்டு வெற்றிக் களிப்புடன் தம் கூடாரங்களுக்கு வந்து சேர்ந்தார்கள்.

சற்று நேரத்திற்குப் பின் விச்சேதனனின் படைகள் தம் மன்னரும் அவரது மெய்க்காவலாளிகளும் கொல்லப்பட்டுக் கிடப்பதைக் கண்டன. அதனால் பயந்து அவை அங்கிருந்து ஓடிப் போயின. ஆனால் கிரேக்கர்கள் வழிமறித்து அவர்களை எல்லாம் அடித்துக் கொன்றனர்.

இவ்வளவு நடந்தும் மறுநாள் நடந்த போரில் கிரேக்கர்களுக்கு தோல்வியே கிடைத்தது. இதற்கு முன் அவர்கள் ட்ரோஜன்களிடம் இப்படி ஒரு பலத்த அடி வாங்கியதே இல்லை எனலாம். அப்போரில் ராஜராஜன், ரூபதரன், தேவமயன் முதலிய முக்கிய வீரர்கள் படுகாயப்பட்டனர். போர்க்களத்தில் சிங்கம் போலத் திரிந்து செயல்பட்டவன் ட்ரோஜன் மாவீரன் வீரசிம்மன். அவன் கிரேக்கர்களைத் துரத்தித் துரத்தி அடித்தான். கிரேக்க வீரர்கள் எவ்வளவு முயன்றும் வீரசிம்மனின் தாக்குதலைத் தடுத்து நிறுத்த முடியவில்லை.

பூதவன் விட்டெறிந்த பாறாங்கல் ஒன்று வீரசிம்மனைத் தாக்கியது. அதனால் சற்று நிலைகுலைந்து போனது போலத் தென்பட்டானாயினும் அவன் சற்றும் சளைக்காமல் உற்சாகத்துடன் போர் புரியலானான்.

ட்ரோஜன்கள் விரைவிலேயே கிரேக்கர்களின் கப்பல்களை அணுகிவிட்டனர். ஒரு கப்பலுக்கு அவர்கள் தீயும் மூட்டி விட்டார்கள். அந்தக் கப்பல் சந்திரப்பிரபனுடையது. கிரேக்கக் கப்பல்கள் ட்ராய் கடற்கரையை அடைந்தபோது எல்லோருக்கும் முன்னதாகக் கப்பலிலிருந்து கரையில் இறங்கித் தன்னை பலியிட்டுக் கொண்டவன் இந்தச் சந்திரபிரபன்.

**(தொடரும்)**



# அம்புலிமாமா செய்திகள்

## ஒய்வு எடுத்துக்கொள்ளும் வண்டி!

நன்கு சாய்ந்து கொண்டு உட்கார்ந்து சுகமாகச் செல்லும் விதத்தில் ஒரு ஸ்கூட்டர் தயாரிக்கப்பட்டுள்ளது. இதன் சக்கரங்கள் நாற்காலியின் கால்கள் போலுள்ளன. ஒவ்வொரு சக்கரத்தின் உயரம் 60 செ.மீ. மேல் அகலம் 15 செ.மீ. இவை மேடு, பள்ளங்களில் ஆட்டமில்லாமல் செல்லும். இதற்கு 24 வோல்ட் மின்சார மோட்டார், 3 புஷ் பட்டன் ஸ்விட்ச்கள் உள்ளன. இதை எளிதில் கழற்றி பாகங்களாகப் பிரித்து ஒரு காரின் டிக்கில் வைத்துக் கொண்டு போக முடியும். இவ்வளவு வசதிகள் கொண்ட இந்த வண்டியை யாருக்காகத் தயார் செய்தார்கள் தெரியுமா? கை,. கால்கள் நன்றாக உள்ளவர்களுக்காக அல்ல. உடல் ஊனமுற்றவர்களுக்குத்தான்.



## பாடுவதில் சாதனை!

சென்னையைச் சேர்ந்த கல்லூரி மாணவர்கள் சிலர் ஒன்று சேர்ந்து 'லக்ஷ்மண் சுருதி' என்ற இசைக் குழுவை அமைத்துள்ளார்கள். அது மெல்லிசையைக் குறிப்பாக சினிமாப் பாடல்களைப் பாடி மக்களைப் பரவசப்படுத்துகிறது. இவர்கள் கடந்த டிசம்பர் 17ந் தேதி இடைவிடாமல் தொடர்ந்து 36 மணி நேரம் சினிமாப் பாட்டுகளாக இசைத்து ஒரு சாதனையையே படைத்து விட்டார்கள். இவர்கள் தம் திறமையை அனைத்துலகப் பாராட்டை பெற 'கின்னஸ் புக் ஆப் ரிகார்ட்ஸ்' வெளியிடும் நிறுவனத்திற்கு அனுப்பி இருக்கிறார்கள்.

## வேகமே ஆனால் விபத்து இல்லை!

'ஷீன்காப்னெஸ்' என்ற புல்லட் ரயில் கடந்த முப்பது ஆண்டுகளாக ஜப்பானில் டோக்கியோ-ஒசாகா நகரங்களுக்கு இடையே மணிக்கு 220 கி.மீ. வேகத்தில் ஓடிக் கொண்டிருக்கிறது. ஆனால் அது இதுவரை ஒரு விபத்தில் கூட அகப்படவில்லை. 1964 நவம்பர் 1ந் தேதி ஓட ஆரம்பித்த இந்த ரயில் ஜப்பானில் வேகமாக ஓடும் ரயில்களுக்கு எல்லாம் முன்னோடி. இதற்குப்பின் வந்த வேக ரயில்கள் சில நிறுத்தப்பட்டு விட்டன. ஆனால் இதை மட்டும் நிறுத்தாமல் ஓட்டிக் கொண்டிருக்கிறார்கள். மணிக்கு 270 கி.மீ. வேகத்தில் செல்லும் நெளேஜாமி என்ற ரயிலை 1992ல் முதலில் ஓட்ட ஆரம்பித்தனர். இதனால் டோக்கியோ-ஒசாகா ரயில் பாதையில் மற்ற ரயில்களை விடக் குறைந்த நேரத்தில் போக முடிந்தாலும் இது வேறு சில காரணங்களால் நிறுத்தப்பட்டது. ஆனால் ஷீன்காப்னெஸ் இன்னமும் ஓடிக் கொண்டுதான் இருக்கிறது.






# ராட்சஸனின் தீர்ப்பு

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படி விடாப்பிடியாக இந்த வேலையைச் செய்வதைப் பார்த்தால் உன்னைக் கண்டு பரிதாபப்பட வேண்டித்தான் உள்ளது. சிலர் சுயநலம் காரணமாகத் தம் முன்னேற்றம்தான் பார்ப்பார்களேயொழிய, பிறரைப் பற்றிச் சற்றும் கவனிப்பட மாட்டார்கள். சமூக நலன், சமுதாய நன்மை என்றெல்லாம் ஏதேதோ கூறுவார்களேயொழிய ஒரு துரும்பைக் கூட எடுத்துப் போட மாட்டார்கள். எனவே நீ இந்த மாதிரியான சுயநலக்காரனிடம்

## வேதாளம் சொல்லும் கதை



அகப்பட்டுக் கொண்டு விட்டாயோ? இப்படிப்பட்டவனுக்கு எதைக் கொடுத்தாலும் தகுதியற்றவனுக்குச் செய்யும் தானமாகத்தான் இருக்கும். பாத்திரம் அறிந்து பிச்சை இடு என்று சும்மாவா சொன்னார்கள்? ரத்தவர்ணன் என்ற ராட்சஸன் தன்னிடமிருந்த அபூர்வ மணியைத் தகுதி இல்லாத ஒருவனுக்குக் கொடுத்த கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

தண்டகாரணியம் என்ற காட்டில் ரத்தவர்ணன் என்ற ராட்சஸன் இருந்தான். அந்தக் காடு ஹேமகிரி, சிம்மகிரி என்ற இரு நாடுகளின் எல்லைக் காடாக இருந்தது. எனவே அக்காட்டின் வழியே இருநாடுகளிலிருந்தும் பயணிகள் போய் வருவதுமாய் இருந்தார்கள். இது ரத்தவர்ணனுக்கு அனுகூலமாக இருந்தது. பயணிகள் நடமாட்டம் அதிகமாக அப்பகுதியில் இருந்ததால் அவன் நினைத்த போது யாராவது ஒரு பயணியைப் பிடித்துக் கொன்று தின்று வந்தான்.

ஒருமுறை தேவலோகத்திலிருந்து மணிப்பிரபா என்ற தேவகன்னிகை பூலோக அதிசயங்களைக் காண வந்தாள். அவள் பேரழகி. பிறருக்கு இரங்குபவள். அவள் தண்டகாரண்யப் பகுதியில் உலாவிக் கொண்டிருக்கையில் அவள் அணிந்திருந்த விலை மதிப்பும் சக்தி வாய்ந்ததுமான வைர மணி ஒன்று கீழே விழுந்து விட்டது. அவள் அதை கவனிக்கவில்லை. சற்று நேரத்திற்குப்பின் அவள் தேவலோகத்திற்குச் சென்று விட்டாள்.

ரத்தவர்ணன் அப்பகுதியில் யாராவது பயணி வருகிறானா என்று பார்த்து அலைந்து கொண்டிருந்தான். அவன் கண்ணுக்கு மணிப்பிரபா நழுவவிட்ட வைரமணி தென்பட்டது. அவன் அதை எடுத்துப் பார்த்தான். அது பளபளவென மின்னவே அது ஒரு அதிசயப் பொருளாக அவனுக்குத் தோன்றியது. அதனால் அவன் அதை தன் கழுத்தில் அணிந்து கொண்டான்.

அவன் அந்த மணியை அணிந்ததும் அவன் குணத்தில் பெருத்த மாற்றம் ஏற்பட்டது. மிகக் கொடூர குணம்

கொண்ட அவன் மனம் மாறி இரக்கம், கருணை முதலிய நற்குணங்கள் கொண்டதாக ஆகியது.

அப்போது சில பயணிகள் வந்து கொண்டிருப்பதை ரத்தவர்ணன் கண்டான். ஒரு சிறுவன் தன்னைத் தூக்கிக் கொண்டு செல்லுமாறு தன் தந்தையிடம் கூறி அடம் பிடித்தான். தந்தையோ தன்னால் அவனைத் தூக்க முடியாது என்றும் அவன் நடந்துதான் வரவேண்டும் என்றும் கூறினான்.

இதைக் கண்ட ராட்சஸன் அவர்கள் முன் போய் "பாவம்! சிறு பையனால் நடக்க முடியவில்லை என்றால் பெரியவனான நீ தூக்கிச் செல்லக் கூடாதா? சரி. என் தோளின் மீது நீங்கள் இருவருமே உட்கார்ந்து கொள்ளுங்கள். நீங்கள் போக வேண்டிய இடத்திற்கு நான் ஒரு நொடியில் கொண்டு போய்ச் சேர்க்கிறேன்" என்றான். ராட்சஸனைக் கண்டதும் தந்தையும் மகனும் பயந்து ஓடிப் போயினர்.

மனிதர்களைக் கண்டாலே பாய்ந்து விழும் நான் ஏன் அவர்களுக்கு இரக்கப்பட்டேன் என்று எண்ணி ரத்தவர்ணன் ஆச்சரியப்பட்டான். இது பற்றி யோசித்தவாறே அவன் ஒரு மரத்தடியே உட்கார்ந்தான். அவனை அவ்வழியே சென்று கொண்டிருந்த தர்மஞானி என்ற முனிவர் பார்த்தார். அவர் தவ வலிமை மிக்கவர்.

அவர் ரத்தவர்ணனிடம் போய்



அவன் கவலையைக் கண்டு "ரத்தவர்ணா! உன் மாற்றத்திற்குக் காரணம் நீ அணிந்திருக்கும் மணிதான். அது இரக்க குணத்திற்கே உறைவிடமான மணிப்பிரபா என்ற தேவ கன்னிகையுடையது. அதற்கு ஒருவன் விரும்புவதை நிறைவேற்றி வைக்கும் சக்தி உள்ளது. அதனால் நீ பிறருக்கு உதவ வேண்டும் என எண்ணினால் இந்த ராட்சஸ உருவத்தில் இருந்தால் முடியாது. ஏனென்றால் உன் இந்த உருவத்தைக் கண்டு எல்லோரும் பயப்படுவார்கள். அதனால் நீ மானிட உருவம் எடுத்து உதவி புரி" என்று கூறிவிட்டுச் சென்றார்.

அந்த மணியின் சக்தியைப் பரீட்சிக்க எண்ணி ரத்தவர்ணன் தான்

ஒரு மனிதனாக மாறவேண்டும் என நினைத்தான். மறுநிமிடமே அவன் ஒரு மனிதனாக மாறி விட்டான்.

அன்றுமுதல் அவன் அக்காட்டின் வழியே செல்லும் பயணிகளுக்கு உதவி வரலானான். பயணிகளைத் துன்புறுத்தும் திருடர்களையும் கொள்ளைக்காரர்களையும் அடித்துத் துரத்தினான். பயணிகள் தாகம் தணித்துக் கொள்ள அவன் வழியில் பல கிணறுகளை வெட்டினான். கரடுமுரடான பாதையை நேராக்கினான்.

ஆனால் ஒரு எதிர்பாராத சம்பவம் நிகழ்ந்தது. தர்மஞானி மணியின் சக்தி பற்றி ரத்தவர்ணனுக்கு கூறிக் கொண்டிருக்கும் போது அதை ஒரு மரத்தின் மீது ஒளிந்திருந்த ஆதித்தன் என்ற சிம்மகிரி ஒற்றன் கேட்டு விட்டான். சிம்மகிரி மன்னன் சிம்மநாதனுக்கு நாடுகளை கைப்பற்ற வேண்டும் என்ற ஆசை அதிகமாக இருந்தது. அவன் ஹேமகிரியுடன் போர் தொடுத்து அதைக் கைப்பற்ற நினைத்தான்.

ஹேமகிரி மன்னன் ஹேமாங்கதன் தர்மவான். அவனது ஆட்சியில் மக்கள் சுகமாக வாழ்ந்து வந்தனர். நாடு வளமையுற்று இருந்தது. சிம்மநாதன் படை எடுத்து வரப் போகிறான் எனக் கேட்டு ஹேமாங்கதன் கவலைப்பட்டான். ஏனெனில் ஹேமகிரியின் படை பலம் சிம்மகிரியினுடையதை விட அதிகமல்ல. எனவே அதனை எதிர்த்தால் தனக்குத் தோல்விதான் என்பது ஹேமாங்கத



னுக்கு நன்கு தெரியும்.

சிம்மகிரி ஒற்றன் ஆதித்தன் மன்னன் சிம்மநாதனைக் கண்டு தான் கேட்டதைக் கூறினான். அந்த சக்தி வாய்ந்த மணியை ராட்சஸனிடமிருந்து எப்படியாவது அடைந்து விட்டால் ஹேமகிரி மட்டுமல்ல, இன்னும் எவ்வளவோ நாடுகளையும் வெல்லலாம் என்று அவன் கூறினான்.

அதுகேட்டு தான் அப்போதே சக்கரவர்த்தி ஆகி விட்டதாக சிம்மநாதன் எண்ணி மகிழ்ந்தான். ரத்தவர்ணனின் உதவியை எப்படியாவது பெற்று விடுவது என்று எண்ணி ரதத்தில் அமர்ந்து காட்டை நோக்கிச் சென்றான்.

இதே சமயம் ஹேமகிரி மன்னன் ஹேமாங்கதனும் ராட்சஸனைத் தேடி வந்து கொண்டிருந்தான். அவனுக்கு தர்மஞானி கூற ரத்தவர்ணனிடமுள்ள அபூர்வ மணி பற்றித் தெரிய வந்ததால் அதை அடைந்து விட்டால் சிம்மநாதனுடன் போர்புரிய வேண்டாம் என்றும் வீண் உயிர் சேதம் ஏற்படாது என்றும் நினைத்தான். எனவே அவன் தர்மஞானி கூறிய படி ரத்தவர்ணனைக் காணச் சென்றான்.

ஆனால் ஹேமாங்கதன் ராட்சஸனைச் சந்திக்குமுன் சிம்மநாதன் அவனைக் கண்டு விட்டான். அவன் ரத்தவர்ணனை வணங்கி "ராட்சஸப் பெரியாரே! உங்களைப் பற்றிக் கேள்விப்பட்டேன். நான் சிம்மகிரி மன்னன் சிம்மநாதன். இந்த அரசர்





கள் எல்லாம் வீணாய் போர்புரிந்து பெரும் நஷ்டத்தை உண்டாக்குகிறார்கள்: எனவே எல்லா நாடுகளையும் ஒன்று சேர்த்து ஒரே குடையின் ஆட்சியின் கீழ் கொண்டு வர விரும்புகிறேன். இப்படிப்பட்ட ஆட்சியில் மக்கள் சுகவாழ்வு வாழ்வார்கள். எனவே தங்களிடம் உள்ள சக்தி வாய்ந்த மணியை எனக்குக் கொடுத்தால் எல்லா மன்னர்களும் எனக்கு அடிபணிந்து விடுவார்கள். அதற்குப் பின் உலகில் போரே இராது. இது நீங்கள் உலகிற்குச் செய்த பேருபகாரமாக இருக்கும்" என்று பணிவுடன் கூறினான்.

ரத்தவர்ணனும் "முதலில் உன் நாட்டிற்கு வந்து உன் ஆட்சி எப்படி இருக்கிறது என்று கண்ட பிறகே உனக்கு மணியைக் கொடுப்பது பற்றி யோசிப்பேன்" எனக் கூறி அவனை அனுப்பி விட்டான்.

சிம்மநாதன் சென்ற பிறகு வந்த ஹேமாங்கதன் ராட்சஸனைக் கண்டு சிம்மநாதன் தன் நாட்டின்மீது படையெடுத்து வரப் போவதைக் கூறி "நீங்கள் உங்களிடமுள்ள அபூர்வ மணியை எனக்குக் கொடுத்தால்தான் என் நாட்டு மக்களைப் படையெடுப்பிலிருந்து காப்பாற்ற முடியும்" என்று வேண்டினான்.

ரத்தவர்ணனும் "மன்னா! கவலைப் படாதே. நான் உன் நாட்டிற்கு வந்து உன் ஆட்சி எப்படி இருக்கிறது என்று பார்க்கிறேன். அதற்குப் பிறகே உனக்கு அந்த மணியைக் கொடுப்பது பற்றித் தீர்மானிப்பேன்" என்று கூறி அவனை அனுப்பினான்.

ரத்தவர்ணன் முதலில் ஹேமகிரி நாட்டிற்குச் சென்றான். அங்கு ஹேமாங்கதனின் ஆட்சி மிக நன்றாக நடப்பதையும் மக்கள் எவ்விதக் குறையும் இல்லாமல் இருப்பதையும் அவன் கண்டான். அந்நாட்டைக் கைப் பற்ற சிம்மகிரி மன்னன் சிம்மநாதன் படைகளை ஆயத்தப்படுத்தி வருவதையும் தெரிந்து கொண்டான்.

இதற்குப் பின் ரத்தவர்ணன் சிம்மகிரிக்குச் சென்றான். அங்கு சிம்மநாதனின் ஆட்சி சரியாக இல்லாததையும் மக்கள் அவதிப்படுவதையும் கண்டான். இதன்பின் அந்த சக்தி வாய்ந்த

மணியை யாருக்குக் கொடுப்பது என்று ரத்தவர்ணன் ஆழ்ந்து யோசித்து முடிவில் அதை சிம்ம கிரியின் மன்னன் சிம்மநாதனுக்கு கொடுத்து விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! ராட்சஸன் அபூர்வ மணியை ஏன் நல்லாட்சி புரியும் ஹேமாங்கதனுக்குக் கொடுக்க வில்லை? கொடிய ஆட்சி புரிந்து நாடுகளைக் கைப்பற்றப் பேராசை கொண்ட சிம்மகிரி மன்னன் சிம்ம நாதனுக்கு ஏன் கொடுத்தான்? இக் கேள்விகளுக்கு நீ சரியான பதிலைத் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "ஹேமாங்கதன் நல்ல மன்னன். அவனது ஆட்சியும் நல்லதாகவே இருந்தது. அவனுக்கு உள்ள ஒரே பிரச்னை சிம்மநாதனின் படை எடுப்பு ஒன்றுதான். ஆனால் சிம்மநாதனோ கொடியவன். அவ னது ஆட்சியோ கொடுங்கோலாட்சி. அவன் நாட்டில் மக்கள் கஷ்டப்படு கிறார்கள். சிம்மநாதனோ ஆட்சியைப் பற்றிக் கவலைப்படாமல் பிற நாடு களைக் கைப்பற்ற ஆசைப்படுகி றான். அவனுடைய மனம் மாறி விட் டால் அவன் நல்லவனாகி விடுவான். அவனது ஆட்சி நல்லதாக இருக்கும். மக்கள் சுகமடைவார்கள். சிம்மநாத னும் பிற நாடுகளைக் கைப்பற்ற ஆசைப்பட மாட்டான். ஹேமாங்கதன் நல்ல மன்னனாதலால் அவன் நாடு எப்போதும் போல நல்லாட்சியில் தான் இருக்கும். இதனால்தான் ராட்ச ஸன் சிம்மநாதனின் மனம்மாற வேண் டும் என எண்ணி சக்தி வாய்ந்த மணியை ஹேமாங்கதனுக்கு கொடுக் காமல் சிம்மநாதனிடம் கொடுத்தான்" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதி லால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிச் சென்று மீண்டும் முருங்க மரத்தின் மீது ஏறிக் கொண்டது.



# சக்கரவர்த்தியாகும் யோகம்

கனகபுரியை ஆண்ட கனகேசனின் மகள் காஞ்சனா. அவள் சோதிட சாஸ்திரம் கற்றவள். அவள் தன் ஜாதகத்தைப் பார்த்துத் தனக்கு வரப்போகும் கணவனுக்கு சக்கரவர்த்தியாகும் யோகம் இருப்பதைக் கண்டு கொண்டாள்.

அவள் தந்தை அவளுக்கு விவாகம் செய்து வைக்கப் பல அரசகுமாரர்களின் உருவப் படங்களை வரவழைத்த போது காஞ்சனா அவர்களது ஜாதகங்களையும் வரவழைத்துக் கொடுக்கச் சொன்னாள். அவை வந்ததும் அவற்றை அவள் பார்த்துவிட்டு "இதில் ஒன்றுகூட சக்கரவர்த்தியாகும் யோகம் கொண்டதாக இல்லையே" என்றாள்.

மன்னனும் "ஜாதக விஷயம் பற்றி உன் குருவிடம் கேட்கிறேன் உனக்கு இந்த அரசகுமாராகளில் யாரைப் பிடித்திருக்கிறது என்று சொல்" எனவே அவளும் அண்டை நாட்டு இளவரசன் அமரசேனனின் படத்தைக் காட்டினாள்.

மன்னனும் உடனே கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்து அதை விமரிசையாக நடத்தி விட்டான். கல்யாணத்திற்கு முன் அமரசிம்மனின் ஜாதகத்தைப்பார்த்து விட்டு காசியாத்திரை போன அவளது குரு பலநாட்கள் கழித்தே திரும்பி வந்தார். அப்படியானால் அவர் சரியாக ஜாதகம் பார்த்தாரா என்ற சந்தேகம் காஞ்சனாவுக்கு வந்தது.

அவள் அதுபற்றித் தன் தந்தையிடம் கேட்டபோது அவன் "அதுதான் உன்னை மணப்பவனுக்கு சக்கரவர்த்தியாகும் யோகம் உள்ளது என்று உன் ஜாதகத்தில் இருக்கிறதே. அதுபோதும் என்று உன் குரு சொல்லிவிட்டார்" என்றான் சிரித்தவாறே.



# பழங்காலக் கோட்டைகள்

## நம் நாட்டுக் கோட்டைகள்-1

படைப்பு : மீரா உக்ரா
சித்திரம் : கௌதம் சென்

தொல் பொருள் ஆராய்ச்சித்துறை 1960ல் ராஜஸ்தானில் வறண்டு போன சரஸ்வதி நதிக்கரையின் பாழடைந்த நகரைத் தோண்டிப் பார்க்கலாயிற்று. அங்கு கிடைத்த கருப்பு வளையல்களைக் கொண்டு அந்நகருக்கு 'காலிபங்கா' (காலி-கருப்பு; பங்கா-வளையல்) எனப் பெயரிட்டனர். சுற்றிலும் மதில்சுவர்கள் கொண்ட காலிபங்கா நகரம் கி.மு 2200-1700 ஆண்டுகளின் இடைக் காலத்தது. அதாவது இது சிந்து வெளிப்பள்ளத் தாக்கு நாகரிகக் காலத்தது எனக் கருதுகிறார்கள்.

அதே காலத்திய சில கோட்டைகள் குஜராத், ராஜஸ்தான், ஹரியானாப் பகுதிகளில் நடத்திய ஆய்வுகளில் வெளிப்பட்டன. மதில்கள் குறிப்பாக எதிரிகளின் படை எடுப்புகளிலிருந்தும் ஆக்கிரமிப்புகளிலிருந்தும் பாதுகாப்பை அளிப்பவை. இது மட்டுமல்ல. இந்த நாகரீகங்கள் வளரக் காரணமாக இருந்த நதிகள் வெள்ளப் பெருக்கு எடுத்து விட்டால் அப்பகுதி மக்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் இடங்களாக இவை பயன்பட்டன. முக்கிய கோட்டை எப்போதும் உயரமான இடத்தில் கட்டப்பட இதுவே காரணம்.

ரிக்வேதம் கோட்டைகளை துர்க்கங்கள் என்றும் புரங்கள் என்றும் பிரித்துள்ளது. கோட்டையை வென்றவனின் பெயர் அதற்கு வைக்கப்பட்டது. யஜுர்வேதத்தின் தனுர்வேதத்தில் கோட்டைகள் கட்டும் தொழில் நுணுக்க விவரங்கள் நன்கு

சிந்துவெளி நாகரிகத்தைச் சேர்ந்த காலிபங்கா

கொடுக்கப்பட்டுள்ளன. தனுர் வேதம் கோட்டைகளை ஆறுவித மாகப் பிரித்துள்ளது. மலை மீது கட்டப்பட்ட கோட்டை கிரிதுர்க்கம். நீரில் கட்டப்பட்டது ஜலதுர்க்கம். காட்டில் கட்டப்பட்டது வன துர்க்கம். சமதரையில் கட்டப்பட் டது மகிதுர்க்கம். பாலைவனத்தில் கட்டப்பட்டது.



புரந்திரன் என்ற இந்திரன்.



ஜலதுர்க்கம்

தன்வாதுர்க்கம். மரத்தின் மீது கட்டப் பட்டது விருக்ஷதுர்க்கம். இந்த ஆறு வகைகளிலும் மலைமீது கட்டப்பட்ட கோட்டையே உயரியதாகக் கருதப்படுகிறது. கோட்டை இல்லாத மன்னன் விஷம் இல்லாத பாம்பிற்குச் சமமாக வர்ணிக்கப்பட்டுள்ளது.

ராமாயணம் அயோத்தி, லங்காபுரிக் கோட்டைகளைப் பற்றி வர்ணிக்கிறது. அயோத்தியின் கோட்டையைச் சுற்றிலும் ஆழமான கடக்க முடியாத அகழிகள் இருந்தன. உயரமான கோபுரக் கும்பங்கள் பயத்தை விளைவிப்பவையாக அமைக்கப்பட்டன. லங்காபுரிக் கோட்டை ஆகாயமளவிற்கு உயர்ந்த பிராகாரங்களும் கோட்டை



கிணறு வெட்டுதல்

காடுகளோடும், ஆறு, குளங்களோடும் அகழிகளோடும் சூழ்ந்து உள்ளன. அது தேவர்களால் கூட துளைக்கப்பட முடியாதது என வர்ணிக்கப்பட்டுள்ளது. மகாபாரதத்தில் ஹஸ்தினாபுரம், இந்திரப்ரஸ்தம், வடமதுரை, ராஜக்கிரகம், அஹிச்சக்கரம், துவாரகை முதலிய நகரங்களிலுள்ள கோட்டைகள் கண்ணெதிரே கட்டப்பட்டவை போல வர்ணிக்கப்பட்டுள்ளன. இந்திரப்ரஸ்தத்திலுள்ள



கோட்டைக்கு கோபுரங்கள் போன்ற உயர்ந்த கோபுரக் கும்பங்கள் உள்ளன. இவற்றிலிருந்து நகரைக் கண்காணித்து விரிவான பாதுகாப்பிற்கு வெவ்வேறு ஏற்பாடுகள் செய்ய வசதியாக இருந்தன. கோட்டையின் தலைவாசலோடு கருடத்துவாரங்களும் மற்றும் பல ரகசிய வழிகளும் இருந்தன.

அலகாபாத் அருகே நடந்த தொல்பொருள் ஆராய்ச்சித் துறையினர் தோண்டி கௌசாம்பிகட் புதைவுச் சின்னங்கள் வெளிப்பட்டன. பரிக்ஷித்துவின் கொள்ளுப்பேரனான விபாக்ஷன் இதைக் கட்டியதாகக் கூறப்படுகிறது.

புத்தரின் காலத்தில் சம்பா, ராஜக்கிரஹம், சாகேத், வாரணாசி முதலியன முக்கிய கோட்டை நகரங்களான விளங்கின. வடமேற்குப் பகுதியிலுள்ள தட்சசீலம், புஷ்கலாவதி, காந்தாரம் ஆகிய நாடுகள் வலிமை மிக்கவைகளாக இருந்தன. அலெக்ஜாண்டர் படை எடுத்து வந்த போது இந்த மன்னர்கள், உறுதியோடு நின்று போர் புரிந்தார்கள். அலெக்ஜாண்டர் புஷ்கலாவதிக் கோட்டையைப் பிடிக்க ஒரு மாதத்திற்கு மேலாயிற்று புருஷோத்தமரோடு.

போர். போர்க்களத்தில் யானைப்படை அணிவகுப்பு. போரில் சிறிய படைகளின் இந்திய வீரர்கள் காட்டிய தைரியமும், துணிச்சலும் அலெக்ஜாண்டரை பயப்பட வைத்து ஆச்சரியத்தில் ஆழ்த்தின. அதுமட்டுமல்ல. அப்போது மகதத்தை ஆண்ட தனநந்தன் மிகுந்த படைபலம் படைத்தவன் எனக் கிரேக்கப் படைகள் கேட்டு பயந்து போயின. பின்னர் சந்திரகுப்த மௌரியன் மகதத்தை ஆண்டபோது வந்த



பாடலிபுத்திரக் கோட்டை வாசல்கள்

கிரேக்க யாத்திரிகரான மெகஸ்தனிஸ் மகத நாட்டின் தலைநகரான பாடலிபுத்திரத்தின் மிகப் பெரிய கோட்டையைப் பற்றித் தன் நூலில் விவரமாக எழுதி இருக்கிறார். கோட்டையின் சுற்றுப் பிரகாரம் 40 கி.மீக்கும் அதிக நீளமானது. கோட்டையைச் சுற்றிலும் 3.5 மீ. ஆழமும் 180 மீ. அகலமுமான அகழி இருந்தது. அதன் நீரினுள் முதலைகள் நீந்திக் கொண்டிருந்தன. கோட்டைக்கு 64 வாசல்களும் 570 கோபுரக் கும்பங்களும் இருந்தன.

நம் நாட்டில் கி.மு. 300-ல் கோட்டைகள் கட்டப்படுவதில் முழுமை பெற்றுவிட்டது.

(இங்குள்ள படங்கள், அந்தந்தக் கோட்டைகளின் அமைப்புகளை ஆதாரமாகக் கொண்டு ஓவியர் வரைந்தவை. கடைசிப்பக்கம் சாஞ்சிஸ்தூப சிற்பத்தின் வரைபடம்)



கோட்டை முற்றுகை



# தங்க மயில்

விந்திய மலைக்காடு ஒன்றில் ஒரு தங்க மயில் திரிவதாக மாணிக்கபுரி யில் பரவியது. மாணிக்கபுரி மன்னன் மரகதசேனன் அந்த அதிசய மயிலை பிடித்துவரத் தன் ஆட்களோடு காட் டிற்குச் சென்றான்.

விந்திய மலைச் சாரலில் மலைச் சாதியினரின் குடியிருப்பு ஒன்று இருந்தது. அந்தக்குடி இருப்பின் தலைவன் மன்னனை மரியாதையுடன் வரவேற்றான். அவனிடம் மன்னன் காட்டில் திரியும் தங்க மயிலைப் பிடிக்க வந்திருப்பதாகக் கூறினான்.

தங்க மயில் என்று கேட்டதுமே அத் தலைவன் சற்றுக் கவலையோடு "அரசே! அந்த தங்க மயில் சில நாட்களாக இப்பகுதியில் தென்பட வில்லை. ஒரு மாதத்திற்கு முன் என் மகள் சிங்கி அதைப் பிடித்து வந்து தங்களுக்குச் சமர்ப்பிக்க நினைத்து அதன் பின்னால் சென் றாள். ஆனால் அன்று போனவள் இதுவரை திரும்பி வரவே இல்லை. நாங்களும் தேடிப் பார்த்தோம். அவள் கிடைக்கவில்லை. ஆனால் ஓரிடத்தில் ஒரு தங்க மயிலிறகு கிடைத்தது" எனக் கூறி ஒருவனிடம் அந்த இறகைக் கொண்டுவரச் சொன்னான்.

அவனும் உள்ளே பத்திரமாகச் சுற்றி வைக்கப்பட்டிருந்த தங்க மயில் இறகை எடுத்து வந்து மன்னன் முன் வைத்தான். மரகதசேனன் அந்த இறகை எடுத்துப் பார்த்து விட்டு "ஆகா! அற்புதம்! இந்த மயில் தேவ லோகத்திலிருந்து வந்ததாகத்தான் இருக்க வேண்டும். அதனால்தான் உன் மகள் காணாமல் போயும் கிடைக்கவில்லை. நான் போய் அந்தத் தங்க மயிலையும் உன் மகளையும் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு வருகிறேன்" என்று கூறித் தன் ஆட்

-எஸ். சுதா-



களோடு காட்டிற்குள் சென்றான்.

அவர்கள் காட்டில் தங்க மயிலைத் தேடி அலைந்து திரிந்தார்கள். மாலை யாவதற்கு சற்று நேரத்திற்கு முன் ஒரு வீரன் ஓரிடத்தில் ஒரு மயிலின் கால்த் தடயங்களைப் பார்த்தான்.

சற்று தூரம் போனதும் அங்கு ஒரு பாம்பும் தங்க மயிலும் சண்டை போட்டுக் கொண்டிருப்பதைக் கண்டான். மயில் தன் அலகாலும் கால்களாலும் அந்தப் பாம்பைக் குத்திக் குத்தித் தள்ளிக் கொண்டிருந்தது.

அந்த வீரன் செய்த சைகையைக் கண்டு மன்னன் தன் வீரர்களோடு வந்து அந்த மயிலைச் சூழ்ந்து கொண்டான். அவர்கள் தன்னைப் பிடிக்க வந்திருக்கிறார்கள் எனக் கண்ட அந்த மயில் சட்டென உயரக் கிளம்பி பறந்து போய் ஒரு புதரருகே இறங்கி ஓடி விட்டது.

மன்னனும் அதைத் துரத்திக் கொண்டே சென்றான். மன்னன் குதிரைமீது சென்றதால் அவனது ஆட்களால் அவனோடு செல்ல முடியவில்லை. மயில் ஓட ஓட மன்னனும் அதன் பின்னால் தன் குதிரையைச் செலுத்தினான். மயில் ஒரு ஆற்றின் கரையிலுள்ள குடிசைக்குள் புகுந்தது.

அக்குடிசையிலிருந்த கிழவி அதை எடுத்துக்கொண்டு "ஏன் ஓடி வருகிறாய்? மறுபடியும் ஏதாவது ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டாயா?" என்று கேட்டுப் பரிவுடன் அதைத் தடவிக் கொடுத்தாள்.

மன்னன் அந்தக் குடிசையின் முன் அந்தக் குதிரையை நிறுத்தி அதிலிருந்து இறங்கி உள்ளே சென்றான். அப்போது நன்கு இருட்டி விட்டது. குடிசைக்குள் தங்க மயில் பளபளவென்று மின்னிக் கொண்டிருந்தது. குடிசை முழுவதும் பட்டப் பகல் போல் வெளிச்சமாக இருந்தது.

மன்னன் கிழவியின் கையிலுள்ள மயிலை ஆசையோடு பார்த்து "பாட்டி இந்த தங்க மயிலைப் பிடிக்கத்தான் இவ்வளவு தூரம் வந்தேன். ஆனால் அது உன்னிடம் அகப்பட்டு விட்டது. அதை எனக்குக் கொடுத்து விடு. அதற்கு பதிலாக உனக்கு இந்தரத்தின மாலையைக் கொடுக்கிறேன்" என்று

மாலையைக் கழற்றப் போனான்.

கிழவி மன்னனை ஆச்சரியத்துடன் பார்த்து "கெட்டிக்காரனாக இருக்கிறாயே. இது நான் வளர்க்கும் மயில். வேண்டுமானால் இதன் இறகு ஒன்றைப் பிடுங்கித் தருகிறேன். எடுத்துக் கொண்டு போ" என்றாள்.

மன்னன் கோபம் கொண்டு "நான் யார் தெரியுமா? இந்நாட்டு மன்னன். இந்நாட்டிலுள்ள காடு, வீடு, மக்கள், மிருகங்கள், பறவைகள் என்று எல்லாமே எனக்குச் சொந்தம். அதனால் இந்தத் தங்க மயிலும் என்னுடையதே" எனக் கூறி அதைப் பிடிக்கப் போனான்.



அவன் அந்த மயிலைத் தொட்டதுமே மின்னல் தாக்கியவன் போலச் சுருண்டு விழுந்தான். சற்று நேரம் கழித்து அவன் எழுந்து நின்றான். அப்போது அந்த கிழவி அவனிடம் "இதோ பாரப்பா! இது சாதாரண மயில் அல்ல. தெய்வாம்சம் பொருந்தியது. என் அனுமதியில்லாமல் யாரும் இதைக் கொண்டு போய் விட முடியாது. உன்னைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. நீ இதோ உள்ள வீணையில் மேகமல்ஹார் ராகம் வாசி. ஒரு வேளை இந்த மயில் ஒரு முட்டை போடும். அதை நீ எடுத்துக் கொண்டு போகலாம். அதை பத்திரமாக உன் அரண்மனையில் வைத்துப் பாதுகாத்து வா. கொஞ்ச நாளானதும் இதிலிருந்து மயில் குஞ்சு வெளி வரும். அது தங்க நிறத்தில் இருக்கும்" என்றாள்.

மன்னனும் அந்த வீணையை எடுத்து சுருதி சேர்த்து மேகமல்ஹார் ராகத்தை வாசிக்கலானான். மயில் உடனே நடனமாடி ஒரு தங்க முட்டை இட்டது. கிழவி அந்த முட்டையை எடுத்து மன்னன் கையில் கொடுத்து "'இதோ பார்! இது ஒரு வாரமானதும் வெடிக்கும். இதிலிருந்து தங்க மயில் குஞ்சு வெளி வரும். அதுவரை இந்த முட்டை மீது சூரியனின் கிரணங்கள் படக்கூடாது. நீ இந்த முட்டையை பற்றி யாரிடமும் எதுவும் சொல்லக்கூடாது. அப்படிச் சொன்னால் இதன் சக்தி போய் விடும்" என்றாள்.



மன்னன் அந்தத் தங்க முட்டையை எடுத்துக் கொண்டு மகிழ்ச்சியுடன் குதிரை மீதேறி அரண்மனைக்குச் சென்றான். அவன் அந்தத் தங்க முட்டையை ஒரு சந்தனப் பெட்டியில் வைத்து தனி அறை ஒன்றில் பத்திர மாக வைத்தான்.

ஆறு நாட்கள் கழிந்தன. ஏழாவது நாள் மாலை மன்னனின் பனிரெண்டு வயதான மகள் மல்லிகா தங்க முட்டை வைக்கப்பட்டிருந்த அறைக்குள் தற் செயலாகச் சென்றாள். அங்கிருந்த சந்தனப் பெட்டியைப் பார்த்து அதில் என்ன இருக்கிறது என்று காண அதைத் திறந்தாள்.

அதில் தங்க முட்டை இருப்பது கண்டு ஆச்சரியப்பட்டாள். அதைத் தன் தோழிகளுக்குக் காட்ட எடுத்துக் கொண்டு பூங்காவிற்குள் ஓடினாள்.

பூங்காவில் மாலை வெயில் அந்தத் தங்க முட்டை மீது படவே முட்டை பலத்த சத்தத்தோடு உடைந்தது. அதிலிருந்து ஒரு சிறுபாம்புக் குட்டி வெளியே வந்து அரசகுமாரியைத் தீண்டியது. மறு விநாடியே அரச குமாரி தங்க மயிலாக மாறிப் பறந்து போய் விட்டாள். இதைக் கண்ட அரசகுமாரியின் தோழிகள் மன்னன் மரகதசேனனிடம் போய் அச்சம்ப வத்தைக் கூறினார்கள்.

மன்னன் உடனேயே குதிரை மீது அமர்ந்து முன்தான் கண்ட கிழவியின் குடிசைக்குச் சென்றான். அங்கு அவன் மூன்று தங்க மயில்களைக் கண்டான். அப்போது அங்கிருந்த கிழவி "மறுபடியும் வந்தாயா? நான் கொடுத்த முட்டை உடைந்ததா? இன் னொரு முட்டை வேண்டுமா?" என்று ஒன்றுமே தெரியாதவள் போலக் கேட்டாள்.

மன்னனோ கடுங்கோபத்தோடு "ஏ கிழவி! என் ஒரே மகள் தங்க மயிலாக மாறி இங்கே வந்து விட் டாள். என் மகளை முன் போலாக்கிக் கொடு. அப்படிச் செய்யாவிட்டால் உன்னைக் கொன்று விடுவேன்" என்று கத்தினான்.

கிழவியோ சிரித்தவாறே "அட சூரப்புலி! என்னைக் கொல்வது இருக்கட்டும். இந்த மூன்று மயில் களில் உன் மகள் யார் என்று கண்டு

பிடி. சரியாகக் கண்டுபிடித்தால் அந்த மயிலை உன் மகளாக மாறி விடுகிறேன். கண்டு பிடிக்கா விட்டால் நீ மயிலாக மாறிவிடுவாய்" என்றாள்.

மன்னன் மூன்று மயில்களையும் பார்த்தான். அதில் ஒரு மயில் அவனையே பார்த்துக் கண்கலங்கிக் கொண்டிருந்தது. இன்னொரு மயில் தலை குனிந்து கொண்டிருந்தது. மன்னன் தன்னைப் பார்த்துக் கண் கலங்கும் மயில்தான் என் மகள் மல்லிகா, அடுத்து இருக்கும் மயில் மலைச் சாதித் தலைவனின் மகள் சிங்கி" என்றான்.

கிழவியும் "பேஷ் சரியாகச் சொல்லி விட்டாய். அந்த மயிலை உன் மகளாக மாற்றுகிறேன்" என்று ஏதோ மந்திரத்தை உச்சரிக்க போனாள். அப்போது மன்னன் "கிழவி! நில். அந்த மலைச்சாதித் தலைவனின் மகளையும் மாற்றிக் கொடு" என்றான்.

கிழவியோ "நீ உன் மகளை அழைத்து போ. மற்றவர்களைப் பற்றிக் கவலைப்படாதே" என்றாள். மன்னனோ" நான் மன்னன். மலைச் சாதித் தலைவன் என் குடிமக்களில் ஒருவன். எனவே நான் அவனைப் பற்றிக் கவலைப்படாமல் இருக்க முடியுமா? அந்த மயிலையும் மாற்ற முடியாதென்றால் என்னையும் மயிலாக மாற்றிவிடு" என்றான்.

கிழவியும் "மன்னா! உன் கடமை உணர்ச்சியைப் பாராட்டுகிறேன். உனக்கு உன் மகளையும் மலைச் சாதித் தலைவனின் மகளையும் முன் போலாக்கித் தருகிறேன். மூன்றாவது மயிலைப் பிடித்துக் கூண்டில் அடைக்க நினைக்காதே அதைச் சுதந்திரமாக இருக்கவிடு" என்று கூறி இரு மயில்களையும் பெண்களாக்கி மன்னனிடம் ஒப்படைத்தாள்.

மன்னனும் கிழவிக்கு நன்றி கூறி மலைச்சாதித் தலைவனிடம் அவன் மகளை ஒப்படைத்துவிட்டுத் தன் மகளோடு அரண்மனைக்குச் சென்றான்.





# கலைஞர்கள் தேவையே

லாலாப்பேட்டை ஜமீன்தாரர் லட்சுமணசிங் தன்னிடம் மானியம் பெறும் இசைக் கலைஞர்களையும் மற்ற கலைஞர்களையும் மிகவும் வெறுக்கலானார். அவர்களுக்கு கொடுக்கப்படும் மாத ஊதியமும் மானியமும் வீண் என்று அவர் கருதினார். இப்படி அள்ளிக் கொடுத்தால் அவர்கள் சோம்பேறிகளாக இருந்து ஒரு வேலையும் செய்ய மாட்டார்கள் என்பது அவரது கருத்து.

அவர் தம் திவானிடம் தம் கருத்தைக் கூறவே அவரும் "ஐயா! கேட்க விரும்பினாலும் அல்லது விரும்பாவிட்டாலும் நான் சொல்வதைச் சற்று பொறுமையாகக் கேளுங்கள். கலைஞர்கள் சோம்பேறிகளாகி விடுவார்கள் என்பது தவறான கருத்தாகும். உழைத்து வேலை செய்வது எவ்வளவு அவசியமோ இக்கலைகளை வளர்க்கும் இக்கலைஞர்களும் மிகவும் அவசியம்" என்று கூறினார்.

ஜமீன்தாரரோ "நீங்கள் கூறுவதை ஏற்கமாட்டேன். நாட்டை வீரர்கள் காக்கிறார்கள். விவசாயிகள் உணவை அளிக்கிறார்கள். எனவே இப்படிப் பட்டவர்களைத்தான் நாம் உற்சாகப் படுத்த வேண்டுமேயொழிய பாட்டுப் பாடி தாளம் போட்டுக் காலத்தை வீணாக்கும் இந்தக் கலைஞர்களை ஆதரிக்கக் கூடாது. அதனால் என் கருத்தை நான் மாற்றிக் கொள்ளப் போவது இல்லை. வலியுறுத்தத்தான் போகிறேன்" என்றார்.

இசைக் கலைஞர்களை ஜமீன்தாரர் சோம்பேறிகள் எனக் கருதுகிறார் என்பது எல்லோருக்கும் தெரிந்து போயிற்று. அதனால் மக்கள் அவர்களை வேலை வெட்டி இல்லாதவர்கள் என்றும் சோம்பேறிகள் என்றும் கேலி செய்யலானார்கள். இதனால் அந்த ஜமீனில் இசைக் கலைஞர்களும்

-பாபநாசம் சாமா-

நாட்டியக் கலைஞர்களும் அங்கு இருக்க மனமில்லாமல் அந்த ஜமீனை விட்டு வெளியேறி விட்டார்கள். அந்த ஜமீனில் நாடகமோ நாட்டியமோ இசைக் கச்சேரிகளோ எதுவுமே நடைபெறாமல் போயிற்று.

இப்படி இருக்கையில் ஜமீன்தாரரின் மனைவி நோய் வாய்ப்பட்டாள். வைத்தியர்கள் மிகவும் சிரமப்பட்டு அவளை குணப்படுத்தினார்கள். ஆனால் அவள் உடல் மெலிந்து மனம் தளர்ந்து உற்சாகமே இல்லாமல் இருந்தாள்.

அப்போது ஆஸ்தான வைத்தியர் ஜமீன்தாரரிடம் "ஐயா! ஜமீன்தாரிணியின் உடலிலுள்ள நோயை மருந்துகள் கொடுத்துப் போக்கி விட்டோம். ஆனால் அவருக்கு மனதில் உற்சாகத்தையும் ஆனந்தத்தையும் அளிக்க நீங்கள்தாம் ஏற்பாடு செய்ய வேண்டும். அவ்வாறு ஏதாவது செய்தால் முன்போல மகிழ்ச்சியுடன் அவர் இருப்பார்" என்று கூறினார்.

இதைக் கேட்ட ஜமீன்தாரர் யோசிக்கலானார். அப்போது அங்கே இருந்த திவான் "ஐயா! வேலை செய்து களைத்து போனாலும் மனம் சோர்வுற்றாலும் இசை, நாடகம், நாட்டியம் போன்ற கலைகளால் உற்சாகமும் மகிழ்ச்சியும் அடைய முடியும் என நம் முன்னோர்கள் கூறியும் எழுதியும் வைத்துள்ளார்கள். எனவே ஜமீன்தாரிணியின் மனம் மகிழ இத்தகைய நிகழ்ச்சிகளுக்கு



ஏற்பாடு செய்யுங்கள். இச்சமயத்தில் பிடிவாதமாக உங்கள் கருத்தை வலியுறுத்திக் கொண்டிருக்க வேண்டாம்" என்றார்.

ஜமீன்தாரரும் பதில் பேசாமல் தலையை மட்டும் ஆட்டினார். சில நாட்களில் திவானின் முயற்சியால் இசைக் கலைஞர்களும் நாட்டியக் கலைஞர்களும் வரவழைக்கப்பட்டனர். ஜமீன்தாரிணி அவர்களது பாட்டைக் கேட்டும் நடனத்தைப் பார்த்தும் மகிழ்ந்து போனாள். முதலிரண்டு நாட்களிலேயே அவளிடம் நல்ல மாற்றம் தென்பட்டது. ஜமீன்தாரிணியின் அருகே உட்கார்ந்திருந்த ஜமீன்தாரரும் பாட்டையும் நடனத்தையும் ரசித்தார்.

மூன்றாவது நாள் ஜமீன்தாரிணி உற்சாகத்துடன் எழுந்து நடமாடலானாள். அப்போது இரு பாடகர்கள் அங்கு வந்தார்கள். ஜமீன்தாரர் அவர்களைப் பார்த்து முகத்தை 'உம்'மென்று வைத்துக் கொண்டார். அவர்களோ ஜமீன்தாரரை இந்திரன் சந்திரன் என்று வானளாவப் புகழ்ந்து பாடினார்கள்.

அவர்கள் இசை பாடிய போதிலும் அவற்றில் சில சொற்கள் கேட்க வேடிக்கையாக இருந்தது. 'ஏ ஆரா பாவா' என்ற சொல் என்ன எனத் தெரியாமல் அவர் விழித்தார். அவர் "இது என்ன பேத்தல்? இதுதான் இசையா? நீங்கள் சொல்வது எதுவுமே புரியவில்லையே" என்றார். எனவே ஒரு பாடகனும் "இதில் ஐந்து மொழிகள் கலந்துள்ளன" என்று கூறினான்.

அப்போது திவான் "ஆமாம். மராட்டியில் 'ஏ' என்பதற்கும் ஹிந்தியில் 'ஆ' என்பதற்கும் தெலுங்கில் 'ரா' என்பதற்கும் கன்னடத்தில் 'பா' என்பதற்கும் தமிழில் 'வா' என்பதற்கும் ஒரே பொருள்தான். அதுதான் வா என்பது. இதைப் பாட்டில் எவ்வளவு சாமார்த்தியமாகப் புகுத்தி இருக்கிறார் பாடலாசிரியர்" என்றார்.

அதைக்கேட்ட ஜமீன்தாரர் மகிழ்ந்து "ஓ! இதில் இவ்வளவு பொருள் இருக்கிறதா! நான் ஏதோ கன்னாப் பின்னாவென்று உளறுகிறார்கள் என நினைத்து விட்டேன். நான் இவர்களைப் பற்றி இதுவரை கொண்டிருந்த அபிப்பிராயம் தவறே. இவர்களால் சோர்ந்த மனதிற்கு உற்சாகம் கிடைக்கிறது. இலக்கியத்திற்கும் புத்துயிர் கிடைக்கிறது" என்றார்.

திவானும் "இதுதான் நான் முன்பு சொன்னதும். எனவே இப்படிப் பட்ட கலைஞர்களை ஆதரிப்பது வீணல்ல. இவர்கள் நேரத்தையும் வீணடிப்பவர்களல்ல" என்றார்.

இதற்குப்பின் ஜமீன்தாரர் தம் ஜமீனில் கலைஞர்களை தாராளமாக ஆதரித்து வரலானார்.






அர்ஜுனனோடு போட்டியிட நீ ஒரு மன்னனாக இருக்க வேண்டும் எனக் கர்ணனைப் பார்த்துக் கிருபாச்சாரியார் கூறியது கேட்டு கர்ணன் தன் தந்தையைப் பற்றிக் கூற வெட்கப்பட்டதை துரியோதனன் கவனித்தான்.

கர்ணன் அர்ஜுனனுடன் போட்டி போடப் போட அவன் மன்னனாக இல்லை என்பது ஒரு தடை என்றால் நான் அவனை இப்போதே அங்க நாட்டின் மன்னனாக்குகிறேன்" என்று துரியோதனன் கிருபாச்சாரியாரைப் பார்த்துக் கூறினான்

துரியோதனன் கட்டளையிடவே புரோகிதர் வந்தார். தங்க சிம்மாசனம் கொண்டு வரப்பட்டது. தங்கக் குடங்களில் நீர் கொண்டு வரப்பட்டது. துரியோதனன் கர்ணனை அச்சிம்மாசனத்தில் அமர்த்தி மன்னனாகக் கூறி அபிஷேகம் செய்தான்.

அது முடிந்ததும் கர்ணன் துரியோதனனிடம் "மகாராஜா! நான் உங்களிடம் இந்த மகுடாபிஷேகம் பெற்றதற்கு கைம்மாறாக உங்களுக்கு என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான். துரியோதனனும் "உன் போன்ற வீரனின் நட்புதான் வேண்டும்." என்று கூறினான்.

இதையெல்லாம் கண்டு கர்ணனை வளர்த்த தேரோட்டி தான் ஓட்டும் ரதத்திலிருந்து இறங்கி வந்து

-கர்ணன் மன்னன் ஆனான்-




வாறே பேசாமல் நின்றான். ஆனால் துரியோதனனோ பீமனிடம் "பீமா! நீ பேசியது சரியல்ல, மன்னனாகி விட்டவன் யாருடனும் போரிடத் தயாராக இருக்க வேண்டும் அர்ஜுனனுக்கும் இது பொருந்தும். பிறப்பால் ஒருவன் மாவீரன் ஆகிவிடுவதில்லை. எல்லா லட்சணங்களும், கவச குண்டலங்களோடும் பிறந்த இந்த கர்ணன் சாதாரணப் பிறவி அல்ல, இவன் உலகம் முழுவதையும் ஆளத் தகுதி பெற்றவன். நான் இவனுக்குச் செய்த மகுடாபிஷேகம் யாருக்காவது பிடிக்கவில்லை என்றால் அவன் வந்து தாராளமாக என்னுடன் போர் புரியலாம்" என்று சவால் விட்டான்.

இதைக் கேட்ட சபையில் சலசலப்பு ஏற்பட்டது. இதற்குள் சூரிய அஸ்தமனம் ஆகவே மற்போரோ போட்டியோ நடக்கவில்லை.

துரியோதனனின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அவனுக்கு அர்ஜுனனை எதிர்க்க ஒரு மாவீரன் கிடைத்து விட்டானே அது போதும் எனத் தன் கவலையை விட்டான்.

சில நாட்கள் கழிந்தன. ஒருநாள் துரோணர் தம் சீடர்களை எல்லாம் அழைத்து "எனக்கு நீங்கள் குருதட்சிணை கொடுக்க வேண்டும்" என்றார். அவர்களும் "என்ன வேண்டும்? சொல்லுங்கள்" எனக் கேட்கவே துரோணரும் "பணத் திமிரால் தன் அறிவை இழந்த பாஞ்சால மன்னன் துருபதனைக் கட்டிப் பிடித்து

அங்க நாட்டின் மன்னனாகி விட்ட கர்ணனை வாழ்த்தினான். கர்ணனும் மகன் தந்தைக்கு நமஸ்காரம் செய்வது போல வணங்கினான்.

கர்ணன் ஒரு தேரோட்டியின் மகன் என்று எல்லோருக்கும் தெரிந்து போயிற்று. அப்போது பீமன் கர்ணனைப் பார்த்து "தேரோட்டி மகனே! நீ தேரை ஓட்டாமல் அர்ஜுனனோடு போட்டி போடவா வருகிறாய்? உனக்கு எதற்கு அங்க நாடு? போய் பேசாமல் தேரை ஓட்டிக் கொண்டிரு" என்று ஏளனமாகக் கூறினான்

கர்ணனுக்கு எரிச்சலாக இருந்தது. ஆனால் பதில் எதுவும் கூற முடியாமல் வானத்துச் சூரியனைப் பார்த்த

இழுத்து வரவேண்டும்" என்றார்.

தம் குருவின் கட்டளையை நிறைவேற்ற எல்லா அரசகுமாரர்களும் தயாரானார்கள். கவசங்கள் தரித்து ஆயுதங்கள் ஏந்தித் தேர்களில் அமர்ந்து துரோணரோடு கிளம்பினார்கள் பாஞ்சாலபுரத்தை அணுகிய போது அர்ஜுனன் துரோணரிடம் "குருவே! இவர்களில் ஒருவனால் கூடப் பாஞ்சால மன்னனைப் பிடிக்க முடியாது. இவர்கள் தோற்றுத் திரும்பி வரும் வரை நானும் என் சகோதரர்களும் இங்கே இருக்கிறோம். இவர்கள் வந்தபின் நாங்கள் போய் துருபதனைச் சிறைப்பிடித்து வருகிறோம்" என்றான்.

துரியோதனன் கர்ணனின் துணையோடு துருபதனைத் தாக்கச் சென்றான். இதை முன்கூட்டியே அறிந்து துருபதன் தன் பெரும் படையுடன் அவர்களை எதிர்க்க வந்தான். பலத்த போர் மூண்டது. துருபதனின் தாக்கு தலை எதிர்க்க முடியாமல் துரியோதனன் தன் வீரர்களோடு போர்க் களத்திலிருந்து ஓடி வந்து பாண்டவர்கள் இருக்கும் இடத்தை அடைந்தான்.

அப்போது அர்ஜுனன் துரோணரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு தருமரின் அனுமதியுடன் பீமனை அழைத்துக் கொண்டும் நகுலனையும் சகாதேவனையும் இரு பக்கங்களிலும் தேர்களில் துணைக்கு வரும்படிக் கூறி துருபதனைச் சிறை பிடிக்கச் சென்றான்.

பீமனும் அர்ஜுனனும் துருபத





படை வீரர்களைக் கொல்ல வேண் டாம்" என்று கூவினான்.

அதன்பின் அர்ஜுனன் துருப தனை கட்டி இழுத்துப் போய் துரோணரின் முன் நிறுத்தினான். துரோணர் துருபதனைப் பார்த்து "துருபதா! இப்போது உன் காம்பில்ய நகரம் என் வசமாகி விட்டது. பயப் படாதே. எனக்கு மன்னனாகும் ஆசை இல்லை, நான் அந்தணன், என் சிறு வயது நண்பர்களை மறக்காத வன், இப்போதோ உன்னிடம் நாடு எதுவும் இல்லை. நாம் இருவரும் சமமே, நான் வென்ற நாட்டில் பாதியை உனக்குத் தருகிறேன். இனி நாம் நண்பர்களே" என்றார்.

துருபதனும் துரோணரின் நட்பை ஏற்றான். அவரும் அவனை விடு வித்து அவனது நாட்டில் பாதியை அவனுக்கு அளித்தார். அது முதல் துருபதன் பாஞ்சாலத்தின் தென் பகுதி மன்னனாக இருந்தான். வட பகுதி துரோணரின் ஆட்சியில் இருந் தது.

படை கொண்டு துரோணரை வெல்லத் தன்னால் முடியாது என துருபதன் தெரிந்து கொண்டான். அதுவரை அவனுக்கு ஒரு குழந்தை யும் பிறக்கவில்லை. அதனால் அவன் நாடெங்கும் திரிந்து யோகிகளையும் சாது சன்னியாசிகளையும் சந்தித் தான்.

ஓராண்டு காலம் கழிந்தது. திருத ராஷ்டிரன் தருமருக்கு இளவரசுப்

னின் படையைத் தாக்கி சிதற அடித் தார்கள். அர்ஜுனன் பயங்கரமாகப் போராடி துருபதன் இருந்த இடத்தை அணுகினான். கடும்போர் அவர்களிடையே நடந்தது. சற்று நேரத்தில் அம்பு மழையில் துருபதன் தென்படாமல் போகவே அவனது படையில் குழப்பம் ஏற்பட்டது. அர்ஜுனன் துருபதனின் ரதத்தை நாச மாக்கி அவனைச் சிறை பிடித் தான்.

பீமனும் நகுலனும் சகாதேவனும் பாஞ்சாலப் படையை பயங்கரமாகத் தாக்கி விரட்டினர். அப்போது அர்ஜு னன் உரத்த குரலில் "துருபதனைப் பிடித்து விட்டேன். இவனை இழுத் துச் செல்வோம். வீணாக இவனது

பட்டம் கட்டத் தீர்மானித்தான். தருமர் வீரர். பொறுமை மிக்கவர். கெட்ட சுபாவம் கொண்டவரல்ல. தம் பணி யாட்களிடம் இரக்கம் காட்டுபவர்.

இளவரசராக தருமர் மக்களின் அன்பையும் ஆதரவையும் பெற்றார். அவர் பாண்டு மன்னனை விட மேலானவர் என்று மக்கள் புகழ்ந் தனர். பீமன் பலராமரின் சீடனாகி கதைப் போரிலும் வாட்போரிலும் நல்ல திறன் பெற்று விட்டான்.

அர்ஜுனன் வில் வித்தையில் தனக்கு நிகர் யாரும் இல்லையெனச் செய்ததோடு தினமும் அம்புகளை எய்து புதிய முறைகளைப் பழகி வந் தான். அர்ஜுனன் வேகமாயும் குறி தவறாமல் அம்பு எய்வதும் கண்டு துரோணர் மகிழ்ச்சியும் திருப்தியும் அடைந்தார். அவர் அவனிடம் "யார் உன்னுடன் போர்புரிய வந்தாலும் அவருக்கு தக்க மரியாதை கொடு. போரையும் முறைப்படி செய்" என வும் அறிவுரை கூறினார்.

அர்ஜுனன் துரோணாச்சாரியா ரின் அபிமான சீடனானான். கௌர வர்களோ அவனைக் கண்டு மனம் புழுங்கி அவனைத் தம் எதிரியாக கருதினார்கள். சௌவீர மன்னன் விமலனையும், தத்தமித்திரன் என்ப வனையும் அவன் தம்பியையும் அர் ஜுனன் கொன்றான். அவன் தன்னந் தனியனாக கிழக்குப் பகுதிகளில் சென்று அங்குள்ள மன்னர்களை வென்றான். மேலும் பல மன்னர் களை வென்று ஹஸ்தினாபுரத்திற்குக் கப்பம் கட்டும்படியும் செய்தான்.





யும் ஒழித்தேயாக வேண்டுமென்று யோசனை கூறினான்.

திருதராஷ்டிரனைப் போலவே துரியோதனனும் மனம் புழுங்கினான். அவன் தன் நண்பன் கர்ணனிடமும் துச்சாதனனிடமும், மாமா சகுனியிடமும் கலந்து ஆலோசித்தான். அவர்கள் பாண்டவர்களை ஒழித்துக்கட்ட வேண்டும் எனத் தீர்மானித்து அது பற்றி திருதராஷ்டிரனிடம் கூறினால் அவனும் அதற்குச் சம்மதிப்பான் என்றும் கருத்து தெரிவித்தார்கள்.

பாண்டவர்களை வாரணாவத புரம் என்ற காசிக்கு அனுப்பி அங்கு அவர்களை அரக்கு மாளிகையில் தங்க வைத்து அந்த வீட்டிற்குத் தீ மூட்டி அவர்களை உயிரோடு எரித்து விடுவது என்பது அவர்கள் திட்டம் போட்டார்கள்.

திருதராஷ்டிரன் தன் அமைச்சர்களையும் பாண்டவர்களிடம் அனுப்பி அவர்கள் வாரணாவதபுரம் போய்ப் பார்த்தால் மிக நன்றாக இருக்கும் என்றும் வாரணாவதபுரம் மிக அழகான நகரம் என்று சொல்லச் சொன்னான். திருதராஷ்டிரனும் பாண்டவர்களை அழைத்து "பாண்டு புத்திரர்களே! வாரணாவதபுரம் பார்க்க மிக அழகாக இருப்பதாக எல்லோரும் கூறுகிறார்கள். அங்கு சிவபிரானுக்குப் பல உற்சவங்கள் நடந்து கொண்டே இருக்கின்றன. நீங்கள் உங்கள் தாயாரையும் கூட அழைத்

அவன் தனக்குக் கிடைத்த காணிக்கைகளையும் ஹஸ்தினாபுரத்திற்கு எடுத்துக் சென்றான்.

நகுலனும் சகாதேவனும் பல மன்னர்களை வென்று ஹஸ்தினாபுரத்தை பலப் படுத்தினார்கள் பாண்டவர்கள் இவ்வாறு புகழ் பெற்று வருவது கண்டு திருதராஷ்டிரன் மனம் வெதும்பினான் அவன் மனதை வெறுப்பு அரிக்கலாயிற்று. பாண்டவர்களை இப்படியே விட்டு விட்டால் மேலும் புகழ் பெற்று விடுவார்களே என்று எண்ணி அவர்களை அமுக்கி விட நினைத்தான். அதனால் அவன் கணிகன் என்ற கிழப் பிராம்மணனிடம் யோசனை கேட்டான். அவனும் எதிரி என்பவனை எப்படி

துக் கொண்டு போய் கொஞ்சகாலம் அங்கு இருந்து விட்டு வாருங்கள்" என்று கூறினான்.

அதுகேட்டு தருமரும் மகிழ்ந்து தாம் வாரணாவதபுரம் போய் அதைப் பார்த்து விட்டு வருவதாகக் கூறினார். இதற்குள் துரியோதனன் புரோசனன் என்பவனை வாரணாவதபுரத்திற்கு முன்னதாக அனுப்பி அரக்கு மாளிகையைத் தயார்படுத்தச் சொன்னான்.

புரோசனனும் துரியோதனன் கூறியபடி வாரணவதபுரத்திற்கு போய் அரக்கு மாளிகையைத் தயார் செய்தான். அது எளிதில் தீப்பற்றிக் கொள்ளும் பொருள்களால் கட்டப் பட்டது. பார்ப்பவர்களுக்கு எந்தவித சந்தேகமும் ஏற்படாத வகையில் மிக நேர்த்தியாக அது கட்டப்பட்டிருந் தது. பாண்டவர்கள் அங்கு தங்கி இருக்கையில் ஏதாவது ஒரு இரவில் அவர்கள் மெய்மறந்து தூங்கும் போது புரோசனன் அந்த மாளிகைக்கு நெருப்பு மூட்டிவிட்டுப் பாண்டவர்கள் உயிரோடு எரிந்து போகும்படிச் செய்வதுதான் திட்டம்.

இது நிறைவேறி விட்டால் பாண்டவர்கள் அடியோடு ஒழிந்து போவார்கள் என்றும் அதன்பின் தானே நாட்டின் மன்னனாகி விடலாமென்றும் துரியோதனன் மனப்பால் குடித்தான்.

ஆனால் எல்லாமே திட்டம் போட்டபடியா நடந்து விடுகிறது. விதியின் விளையாட்டு அலாதிதான். ஒருவனை அழிக்க நினைத்தால் அது நடக்காமல் நேர்மாறாக நடக்கிறது. பாண்டவர்கள் விஷயத்திலும் இது உண்மையே.

துரியோதனனின் மனமோ "இனி பாண்டவர்கள் பூண்டோடு அழிந்து விடப் போகிறார்கள். அதற்குப்பின் நான்தான் மன்னனாவேன். எனக்குப் போட்டியாக வர இனி யாருமே இருக்க மாட்டார்கள்" என்று எண்ணி மகிழ்ந்து போயிற்று. அவன் விதி விளையாடும் என்று சற்றும் நினைத்துக் கூடப் பார்க்கவில்லை.



# கோபாலனின் சந்தேகம்!

கோபாலன் மனநிலை சரியில்லாத காரணத்தால் மருத்துவமனையில் சேர்க்கப் பட்டிருந்தான். சில நாட்களுக்குப் பின் மருத்துவமனை டாக்டர் அவனிடம் "உன் மூளை சரியாகி விட்டது. இனி நீ உன் வீட்டிற்குப் போகலாம்" என்று கூறி அவனது ஊருக்கு அனுப்பி விட்டார்.

கோபாலன் தன் ஊரை அடைந்தபோது ஊர் எல்லை அரசமரத்தடியே ஒருவர் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவரை எங்கோ பார்த்த ஞாபகம் அவனுக்கு வந்தது. அவன் அவரிடம் போய் "உங்களை எங்கோ பார்த்திருக்கிறேன். பசுபதி வீட்டு திருமணத்திலா?" என்று கேட்டான்.

அவர் "இல்லை" என்றார். எனவே கோபாலனும் "ஓ! அப்படியானால் கலியாணராமனின் அறுபதாவது ஆண்டு நிறைவு விழாவிலோ?" என்று கேட்டான். அவரும் "இல்லை" என்றார். எனவே "அப்படியானால் அடுத்த ஊர் சந்தையிலா?" என்று கேட்டான்.

அதற்கு அவர் கோபம் கொண்டு "கோபாலா! இன்னும் உன் மூளை சரியாக வில்லை. நான்தான் உன் தாய் மாமன் வேலப்பன்" என்று கூறி அவனை இழுத்துக் கொண்டு போய் பழையபடி மருத்துவமனையில் சேர்த்துவிட்டு வந்தார்.



# அம்புலிமாமா அனுபந்தம் - 76

நம் நாட்டு மரங்கள் :

## வேப்ப மரம்

ஒரு பெண்மணி வைத்தியரிடம் போய் தன் கணவர் வெகுதூரத்திலுள்ள ஊருக்குப் போகப் போவதாயும், அப்படி அவர் செல்வது தனக்கு இஷ்டமில்லை என்றும் அவரைத் தடுத்து நிறுத்துமாறும் வேண்டினாளாம். வைத்தியர் ஒரு யோசனை கூற அதன்படி அவள் தன் கணவனிடம் "நீங்கள் அந்த ஊருக்குப் போகும் வழியில் புளியமரங்களின் அடியில்தான் தங்கிப் போக வேண்டும். திரும்பி வரும்போது வேப்ப மரங்களின் கீழ் தங்கி வரவேண்டும்" என்றாளாம். அவனும் தன் மனைவி கூறியபடி போகும்போது புளியமரங்களின் அடியே தங்கிச் சென்றான். பாதிதூரம் போவதற்குள் அவனது உடல் நலம் கெட்டு விட்டது. அதனால் ஊர் திரும்பினான். வரும்போது வேப்ப மரங்களின் கீழ் தங்கி வந்ததால் அவன் குணம் அடைந்தானாம். இப்படி ஒரு கதை வேப்ப மரத்தின் சிறப்பை விளக்குகிறது.



வேப்ப மரம் பல மருந்து குணங்கள் கொண்டது. இது கிருமிகளை ஒழிக்கிறது. வேப்பெண்ணெய் சோப்புகள் தயாரிப்பிலும் பற்பசைகளிலும் உபயோகப்படுத்தப்படுகிறது. கிராமங்களில் இப்போதும் வேப்பங்குச்சிகளைக் கொண்டு பலர் பல் துலக்குவதைக் காணலாம். வேப்ப மரக் காற்று மிகவும் நல்லது. பெரியம்மை ஊரில் இருந்தால் அது பரவாதிருக்க வீட்டு வாசலில் வேப்பிலை சொருகி வைக்கிறார்கள். புத்தாண்டு நாளன்று உடம்புக்கு நல்லது என்று வேப்பம்பூப் பச்சடி செய்கிறார்கள். வேப்பம் பலகை மிக உறுதியானது. புழு பூச்சி கரையான் அரிக்காது. வேப்ப மரம் கப்பல்கள் கட்டவும் முன்பு உதவியதாம்.

வேப்ப மரம் உயர்ந்து வளர்கிறது. கிளைகள் நாலா பக்கமும் பரவுகின்றன. இலைகள் சிறியவை. ஆண்டுக்கு ஒருமுறை மார்ச் ஏப்ரலில் துளிர்விடும். அப்போது பூக்கவும் செய்யும். வேப்பம் பூ சிறியதாய் வெள்ளை நிறத்தில் இருக்கும். வேப்பம் பழம் சிறிதாய், சாப்பிட இனிப்பாக இருக்கும்.



# காளிதாசர்

மகாகவி காளிதாசரையும் அவரை ஆதரித்த விக்கிரமாதித்த மன்னரையும் பற்றி அறியாதவர் யார்? நீங்கள் மாதந் தோறும் படிக்கும் வேதாளம் சொல்லும் கதைகூட விக்கிரமாதித்தனின் தொடர்புடையதே.

பழங்கால இந்திய இலக்கியத்தில் காளிதாசரின் காவியங்களும் நாடகங் களும் மிக உயரிய இடம் பெற்றவை என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால் அவர் வாழ்ந்த காலம் பற்றித் தான் பண்டிதர்களிடையே ஒருமித்த கருத்து இல்லை. காளிதாசர் கி.மு. 8வது நூற்றாண்டில் இருந்தவர் எனச் சிலரும் வேறு சிலர் கி.மு. 2வது நூற் றாண்டில் இருந்தவர் என்றும் இன் னும் சிலர் கி.பி. 4வது நூற்றாண்டில் இருந்தவர் என்றும் அபிப்பிராயப்படு கிறார்கள்.

நம் நாட்டு வரலாற்றில் விக்கிர மாதித்தன் என்ற பெயரில் பல மன்னர்கள் உள்ளனர். அவர்களில் இருவர் மிகப் புகழ் பெற்றவர்கள். ஒருவர் விக்கிரம ஆண்டைத் தொடங்கி வைத்தவர். மற்றவர் சந்திரகுப்த விக்கிரமாதித்தர். முன்னவர் கி.பி. முதலாவது நூற்றாண்டிலும், பின்ன வர் கி.பி. 4-5வது நூற்றாண்டிலும் இருந்தவர்கள். பின்னவரின் அவை யில் காளிதாசர் ஆஸ்தான கவிஞ ராக இருந்தார் எனக் கூறுகிறார் கள். ஆனால் இதற்குப் போதிய ஆதாரம் இல்லை. அச்சபையில் 'நவ ரத்தினங்கள்' எனப்படும் தன்வந்திரி, க்ஷபணகர், அமரசிம்மர், சங்கர், வேதாளபட்டர், கடகர்ப்பரர், வராகமி கிரர், வரருசி, காளிதாசர் என்பவர் கள் இருந்தார்கள் எனவும் கருதப் படுகிறது.

எது எப்படி இருந்தாலும் காளி தாசர் உஜ்ஜயினி நகரத்தில் வாழ்ந்தவர் என்பதில் ஐயம் இல்லை. பழங்கால புகழ் பெற்ற நகரங்களில் உஜ்ஜயினியும் ஒன்று.

காளிதாசரைப் பற்றிய ஒரு கதை உண்டு. அவர் ஆரம்பத்தில் எழுதப் படிக்கக் கூட தெரியாதவராம். தன்னை மிஞ்சிப் படித்தவர் யாருமே இல்லை என்று கர்வம் கொண்டிருந்த அரச குமாரியின் கொட்டத்தை அடக்க சில பண்டிதர்கள் சூழ்ச்சி செய்து அவளைப் படிப்பு வாசனையே இல்லாத காளிதாசருக்கு மணம் செய்து விட்டனர். மணமான பிறகே அரசகுமாரிக்கு உண்மை தெரிந்தது. அவள் காளிதாசரை அரண்மனையிலிருந்து விரட்டி விட்டாள். காளிதாசர் காளி பக்தர். அவர் காளி கோவிலுக்குப் போய் அவமானம் தாங்க முடியாமல் தற்கொலை செய்து கொள்ளப் போனார். அப்போது காளிதேவி தோன்றி அவரை மகாகவி ஆக்கி ஆசீர்வதித்து விட்டு மறைந்தாள்.

காளிதாசர் ரகுவம்சம், குமாரசம்பவம் என்ற காவியங்களையும், விக்கிரமோர்வசியம், மாளவிகாக்னிமித்ரம், அபிஞ்ஞாத சாகுந்தலம் என்ற நாடகங்களையும் மேகதூதம், ரிதுசம்ஹாரம் என்ற உயரிய படைப்புகளையும் அளித்துள்ளார்.

சமஸ்கிருத இலக்கியத்தில் மட்டுமல்லாது மற்ற இந்திய மொழிகளில் படைக்கப்பட்ட பல நூல்களின் மீதும் காளிதாசரின் பிரபாவம் மிகவும் உள்ளதைக் காணலாம்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. நம் நாட்டில் தயாரான விண்வெளி ராக்கெட்டின் பெயர் என்ன? அதை எப்போது எங்கிருந்து செலுத்தினார்கள்?
2. பாம்புகள் எத்தனை வகைப்படும்?
3. குஜராத்தின் போர்பந்தர் எதற்குப் பெயர் பெற்றது?
4. முதல் பிரிட்டிஷ் பிரதமர் யார்?
5. நம் நாட்டுக் கோவில் மண்டபங்களில் நீளமானது எது?
6. டெலஸ்கோப்பைக் 'கண்டுபிடித்தவர் யார்? எப்போது கண்டுபிடித்தார்?
7. தாவரஇயல் சோதனைக்கு நம் நாட்டை எட்டு பகுதிகளாகப் பிரித்துள்ளனர். அவை யாவை?
8. 'மெர்டகா கப்' எந்த விளையாட்டிற்கு அளிக்கப்படுகிறது?
9. நம் நாட்டின் முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் எப்போது தொடங்கியது?
10. நம் நாட்டில் தயாரிக்கப்பட்ட முதலாவது 3டீ திரைப்படம் எது? எப்போது தயாரிக்கப்பட்டது?
11. இந்திய விடுதலைக்குப் பாடுபட்ட ஐரிஷ் பெண்மணி யார்?
12. நம் நாட்டில் விமானத் தபால் எப்போது தொடங்கியது?
13. 'ப்ளயிங் ஷேக்' எனப் பெயர் பெற்றவர் யார்?
14. மக்களவையின் முதல் சபாநாயகர் யார்?
15. பிரம்ம சமாஜத்தை நிறுவியவர் யார்?
16. வெடிக்கும் எரிமலைகளில் மிக உயரமானது எது?
17. நம் நாட்டின் புகழ்பெற்ற 'ஓஷன் டு ஸ்கை'யின் துணிகர மலையேற்றத்தின் தலைவர் யார்?
18. இலைகளில் உணவைச் சேகரித்து வைக்கும் செடி எது?

## விடைகள்

1. ரோஹிணி. கேரளாவிலுள்ள தும்பா. 1967 நவம்பர் 20.
2. இரண்டாயிரம் வகைகளுக்கு மேல்.
3. மகாத்மா காந்தி பிறந்த இடம்.
4. சர் ராபர்ட் வால்போல்.
5. ராமேஸ்வரம்.
6. நெதர்லாந்தின் ஹான்ஸ்லிம்ஸ்ரோஷ் 1608 அக்டோபர் 2.
7. தென்மலபார், சிந்து மைதானம், கங்கா மைதானம், அஸ்ஸாம், கிழக்கு இமயம், மேற்கு இமயம், அந்தமான்.
8. கால்பந்து.
9. 1951ல்.
10. மை டியர் குட்டிச் சாத்தான் (மலையாளம்) 1984ல்.
11. அன்னிபெசன்ட்.
12. 1911ல்.
13. விளையாட்டு வீரர் மில்காசிங். 1960 ரோம் ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டியில் 400 மீட்டர் ஓட்டப் பந்தயத்தில் நான்காவது இடம் பெற்றார்.
14. ஜீ.வி. மாவ்லங்கர். 1952லிருந்து 1960 வரை.
15. ராஜாராம் மோகன்ராய்.
16. அர்ஜெண்டினாவிலுள்ள ஆண்டோ போலா. 6450 மீ. உயரம்.
17. சர் எட்மண்ட் ஹிலேரி.
18. முட்டை கோஸ் எனப்படும் கேபேஜ்.



# நட்பும் உதவியும்

கோபுவிற்கு வயது பனிரெண்டு. அவன் வீட்டில் தன் தாயாருக்கும் தந்தைக்கும் எல்லா வேலைகளிலும் உதவி வந்தான். பிறருக்கும் உதவுவது அவன் இயல்பு. எல்லோருக்கும் அவன் என்றால் பிரியமே. கோபுவின் பிரியமான நண்பன் பாலு.

பாலு கோபுவின் அண்டை வீட்டில் வாழ்பவன். பணக்காரனின் மகன். அவன் தனக்கு ஒழிந்த நேரங்களில் கோபுவின் வீட்டிற்கு வந்து அவனுடன் விளையாடுவான். ஒருநாள் கூட கோபுவை அவன் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றதே இல்லை.

ஒருநாள் மாலை அவ்வூர் மைதானத்தில் சில இளைஞர்கள் கவடி ஆட்டம் விளையாடிக் கொண்டிருந்தார்கள் அவர்கள் விளையாடிக் களைத்துப் போனதால் ஓரிடத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது அடுத்த ஊர் பட்சணக்காரனின் வண்டி அங்கு வந்தது.

அதிலிருந்த ஒரு புதுரக பட்சணம் எல்லோரையும் கவர்ந்தது. எல்லோரும் வாங்கித் தின்றார்கள். கோபுவும் வாங்கினான். ஆனால் பாலு வாங்கவில்லை. கோபு அவனிடம் "ஏன்! பணம் இல்லையா வாங்க?" என்று பரிவுடன் கேட்டான். பாலுவும் "என்னிடம் எப்போதும் பணம் இருக்கும். ஆனால் தெருவில் விற்கும் தின் பண்டங்களை நான் வாங்கித் தின்னக் கூடாது என்பது என் அம்மாவின் கட்டளை. அதனால்தான் நான் வாங்கவில்லை" என்றான்.

"நீ தெருவில் விற்பதை வாங்கித் தின்றாய் என்பது அவர்களுக்கு எப்படித் தெரியப் போகிறது? எங்களைப் போல நீயும் வாங்கிச் சாப்பிடு" என்றான் கோபு. பாலுவும்

-கி. அருணா-



"என்னிடம் எவ்வளவு பணம் உள்ளது என்று என் அம்மாவுக்குத் தெரியும். நான் வீட்டிற்கும் போனதும் அவள் பணத்தை எண்ணிப் பார்ப்பாள். குறைந்தால் என்ன செய்தாய் என்று கேட்பாள்" என்றான்.

கோபுவும் "எதையாவது சொல்லித் தப்பி விடு பிச்சைக்காரனுக்குப் போட்டேன் எனலாம். வழியில் விழுந்து விட்டது எனலாம். நீ சொன்னதை உன் அம்மா நம்பமாட்டாளா?" என்று கேட்டான். பாலுவும் சற்று யோசித்து "என் தாயார் நம்பலாம். ஆனால் பொய் சொல்வது பாவம் என்று என் பாட்டி சொல்லி இருக்கிறாளே. அதன்படித்தான் நடப்பேன். உண்மைதான் சொல்வேன். பொய் சொல்ல மாட்டேன்" என்றான்.

கோபுவும் "சரி நான் வாங்கிக் கொடுக்கிறேன். நீ தின்னு. இது உன் வீட்டிக்கு தெரியாது. உன் பணமும் குறையாது. நீ பொய்யும் சொல்ல வேண்டாம்" எனக் கூறி அந்தத் தின்பண்டத்தை வாங்கிக் கொடுத்தான். பாலுவும் அதைச் சாப்பிட்டு மகிழ்ந்தான். அவன் கோபுவிடம் "நீ இதை யாரிடமும் சொல்லி விடாதே. உன் அம்மாவிடம் கூடத் தான். ஏனென்றால் நீ உன் தாயாரிடம் சொன்னால் அவள் என் தாயாரிடம் கூறி விடுவாள்" என்றான். கோபுவும் சொல்வதில்லை என்றான்.

ஒருநாள் பாலுவின் வீட்டில் பாலுவை மட்டும் தனியே விட்டு எங்கோ போக வேண்டி வந்தது. அதனால் பாலுவின் தாய் கோபுவிடம் "கோபு! நீ எங்கள் வீட்டில் நாங்கள் வரும் வரை பாலுவுக்குத் துணையாக இரு. நாங்கள் சீக்கிரமே வந்து விடுகிறோம்" என்று கூறிவிட்டுப் போனார்கள். கோபுவும் பாலுவின் வீட்டிற்கும் சென்றான்.

கோபு பாலுவின் வீட்டிற்குள் போவது அதுதான் முதல் தடவை. அதற்குமுன் அவன் பார்த்திராத பல பொருள்கள் அங்கு இருந்தன. பாலுவுக்கு ஒரு தனி அறை இருந்தது. அதில் கண்ணாடி பீரோ ஒன்று இருந்தது. பலவித விளையாட்டு



பொம்மைகள் இருந்தன. இன்னொரு பீரோவில் புத்தகங்கள் இருந்தன. பாலு அவனிடம் "இவ்வளவு இருந்தாலும் எனக்கு உன்னோடு இருப்பதில்தான் நன்கு பொழுது போகிறது" என்றான். அப்போது கோபு "உன்னிடம் என்னென்ன இருக்கிறது என்று பார்க்கிறேன்" என்று கூறி பிரோவை நோக்கிப் போனான்.

உடனே பாலு அவனைத் தடுத்து "தொடாதே. தொட்டால் அழுக்காகி விடும். அப்புறம் எனக்கு வசைவு தான் கிடைக்கும். யாரும் தொடக் கூடாது என்று என் அப்பா அம்மா சொல்லி இருக்கிறார்கள்" என்றான். அப்போது கோபு "நீ மட்டும் என் வீட்டில் எல்லாம் எடுத்துப் பார்க்கிறாயே" என்று கேட்டான்.

பாலுவும் "உங்கள் வீட்டிலுள்ள பெரியவர்கள் நான் எடுத்துப் பார்க்க தடை செய்வதில்லையே" என்றான். அதன்பிறகு அவர்கள் ஏதேதோ கதைகள் கூறிப் பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனால் கோபுவின் மனம் மட்டும் ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தது.

இன்னொரு நாள் சிறுவர்களில் சிலர் அவ்வூர் குளக்கரையில் உட்கார்ந்திருந்தார்கள். ஒருவன் புல்லாங்குழல்கள் கொண்டு வந்தான். அதைக் கொடுத்து ஊதிப் பார்க்கச் சொல்லவே எல்லாரும் ஊதிப் பார்த்து மகிழ்ந்தார்கள். அவன் ஒரு புல்லாங்குழல் இரண்டு ரூபாய் என விற்கவே பாலு ஒன்றை வாங்கினான். கோபுவிடம் ஒரு ரூபாய்தான் இருந்தது. அவன் பாலுவிடம் ஒரு ரூபாய் கடன் கேட்டான்.

பாலுவோ "கடன் நட்பை முறித்து விடும் என்று என் தாத்தா சொல்லி இருக்கிறார். நான் கொடுக்க மாட்டேன்" என்றான். கோபுவுக்கு கோபம் வந்தது. அவன் ஐந்தாறு தடவை பாலுவுக்காகப் பணம் செலவு செய்திருந்தான். கணக்குப் பார்த்தால் அது இருபது ரூபாய்க்கு மேல் இருக்கும். ஒரு ரூபாய் கொடுக்க பாலு மறுத்தது கோபுவுக்கு எரிச்சலை மூட்டியது.

கோபுவும் "கடன்தான் நட்பை முறிக்கிறது என்றால் இப்போது நீ



ஒரு ரூபாய் கடன் தராததும் நம் நட்பை முறித்து விடும்" என்றான். பாலுவோ "இப்படி எல்லாம் சொல்லாதே கோபு" என்றானே ஒழிய பணம் தரவில்லை.

அப்போது ராமு என்பவன் ஒரு புல்லாங்குழலை வாங்கி கோபுவிடம் கொடுத்து "நீ எனக்கு எவ்வளவோ தடவை உதவி இருக்கிறாய். இதை நான் கொடுக்கிறேன். வாங்கிக் கொள்" என்றான். கோபுவும் "இருக்கட்டும். நீ இதை எனக்கு சும்மா வாங்கிக் கொடுக்க வேண்டாம். என்னிடம் இப்போது ஒரு ரூபாய் தான் இருக்கிறது. இப்போது இந்த ஒரு ரூபாயை வாங்கிக் கொள். நாளை இன்னொரு ரூபாயைக் கொடுத்து விடுகிறேன்" என்றான். பிறகு கோபு பாலுவைப் பார்த்து "தெரிந்து கொள். நண்பன் என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும்" என்றான்.

பாலுவின் முகம் வாடியது. மறு விநாடியே அவன் "இன்று முதல் ராமுவும் என் நண்பன். ஏனென்றால் என் நண்பன் கோபுவுக்குப் புல்லாங்குழலை வாங்கித் கொடுத்து அவனைச் சந்தோஷப்படுத்தினானே" என்றான்.

ஆனால் அன்றிலிருந்து கோபு பாலுவை விட்டு விலகியே இருக்கலானான். பாலு எவ்வளவு முயன்றும் கோபு அவனுடன் பேசாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டான். இதுபற்றி பாலு கோபுவின் தாத்தாவிடம் போய் "கோபு இப்போதெல்லாம் என்னிடம் பேசுவதில்லை" என்று முறையிட்டான். அவரும் பாலுவை அனுப்பிவிட்டு கோபுவை அழைத்து "இவ்வளவு நாட்களாக நீ பாலுவின் நண்பன் எனக் கூறிக் கொண்டிருந்தாயே. இப்போது நீ ஒரு சுயநலக்காரன் என்பது தெரிந்து விட்டது" என்றார்.

கோபவும் "நானா சுயநலம் கருதுபவன்?" என்று ஆச்சரியத்தோடு கேட்டான். அவனது தாத்தாவும் "ஆமாம். நீயும் பாலுவும் நண்பர்கள். நீ அவனுக்குப் பல முறைகளில் உதவினாய். இதற்கெல்லாம் பிரதிபலனை எதிர்பார்க்க கூடாது. அப்படி எதிர்பார்த்

தால் அது சுயநலமே" என்றார்.

அப்போது கோபு "நான் எவ்வளவு தடவை அவனுக்கு உதவினேன். அவன் எனக்கு ஒரு முறை யாவது உதவ வேண்டாமா?" என்று கேட்டான். அவனது தாத்தாவும் "உனக்கு அவன் உதவ வேண்டும் என்று எதிர்பார்த்துத்தான் முன்பு அவனுக்கு உதவிகள் புரிந்தாயா? இதுதான் சுயநலம். உதவி என்பது எவ்வித பலனையும் எதிர்பாராமல் செய்யப்படுவதே. இப்படிப்பட்ட உதவிதான் நண்பனுக்குச் செய்ய வேண்டும்" என்றார்.

அதுகேட்டு கோபு சற்று யோசித்து "அப்படியானால் கொஞ்சம் கூட பாலுவின் மீது தப்பே இல்லை என்கிறீர்களா?" என்று கேட்டான். தாத்தாவும் "தப்பு உன்னுடையதே நீ உன் நண்பனுக்கு உதவினாய். அதனால் அவன் மகிழ்ந்தான். நீ உன் மகிழ்ச்சிக்காக அவன் உதவியை எதிர்பார்த்தாய். இது உன் தப்பே" என்றார்.

"அப்படியானல் இந்த நட்பு எனக்கு வேண்டுமா?" என்று கேட்கவே தாத்தாவும் "ஆம் வேண்டும். ஏனென்றால் இதனால் உனக்கு ஒரு நல்ல படிப்பினை கிடைத்திருக்கிறதே" என்றார்.

கோபு தாத்தா கூறியதிலுள்ள உண்மையைப் புரிந்து கொண்டான். அவன் முன்போல பாலுவுடன் பழகலானான். பாலுவுக்கும் நட்பு என்பது என்ன என்று கோபுவின் தாத்தா கூறியது மனதில் பதிய அவன் இயல்பும் மாறிவிட்டது.

அவனும் "தாத்தா! நீங்கள் கூறியது சரிதான். நான் அவனிடம் உதவி கேட்டபோது அவன் எனக்கு உதவாதது எனக்கு ஆத்திரத்தையே மூட்டி விட்டது. அப்போது என் மனம் கூட நான் பல தடவைகளில் பாலுவுக்கு உதவி செய்திருந்தும் அவன் நான் கேட்டும் கூட எனக்கு உதவவில்லையே எனக் கோபம் கொண்டேன். நான் பதிலுக்கு பாலுவிடமிருந்து உதவியை எதிர்பார்த்தது என் சுயநலமே" என்றான்.





# பாகப் பிரிவினை

மருதூரில் மாணிக்கம் என்ற பணக்காரப் பண்ணையார் இருந்தார். சுற்று பக்கத்து கிராமவாசிகள் அவர் சொல்லும் தீர்ப்புக்குக் கட்டுப்பட்டு வந்தார்கள். அவருக்கு நான்கு மகன்கள்.

சில ஆண்டுகளுக்குப் பின் மாணிக்கம் வயதாகிப் படுத்த படுக்கையாகக் கிடந்தார். அவர் தம் மகன்களைக் கூப்பிட்டு "இதுவரை நாம் பிறர் வழக்குகளுக்குத்தான் தீர்ப்புக் கூறி வந்திருக்கிறோம். யாரும் நமக்கு தீர்ப்புக் கூறியது இல்லை. நான் இன்னும் கொஞ்ச நாட்களில் இறந்து விடுவேன். நீங்கள் என் கட்டில் கால்களில் உங்களுக்கு இஷ்டமானதன் பக்கம் வந்து நில்லுங்கள். நான் இறந்தபின் அவரவர்கள் நின்ற திசையில் இந்த அறை மூலையைத் தோண்டிப் பார்த்து சொத்து விஷயமாய் சண்டை போடாமல் இருங்கள்" என்றார்.

அவர்களும் தந்தை கூறியபடி ஆளுக்கு ஒரு கட்டில் கால் பக்கம் நின்றனர். அதுகண்டு திருப்தி அடைந்த மாணிக்கம் சற்று நேரத்தில் உயிர் நீத்தார்.

தந்தையின் ஈமச் சடங்குகளை முடித்துவிட்டு அப்புதல்வர்கள் அறையில் தாம் தேர்ந்தெடுத்த மூலைகளைத் தோண்டிப் பார்த்தனர். மூத்தவனுக்கு உமி கிடைத்தது. இரண்டாவது மகனுக்குச் சாணம் கிடைத்தது. மூன்றாவது மகனுக்கு மண்தான் கிடைத்தது. நான்காவது மகனுக்கு தங்கமும் வெள்ளியும் கிடைத்தன.

இதைக்கண்ட மற்ற மூன்று சகோதரர்களும் கோபத்தோடு "நம்முடைய தந்தை இவனுக்கு பணம் கொடுத்து விட்டு நம்மை ஏமாற்றி விட்டார். இவனுக்கு தங்கமும்,

-கே. பாலாஜி-

வெள்ளியும். நமக்கோ உமியும், சாணமும், மண்ணும். இது அநியாயம்" என்று கத்தினார்கள்.

நான்காவது மகனோ "நீங்கள் தானே உங்கள் மூலைகளைத் தேர்ந்தெடுத்தீர்கள். நீங்கள் நின்ற பிறகுதானே மீதமிருந்த நாலாவது காலின் பக்கம் நான் நின்றேன். என் அதிர்ஷ்டம் இப்படி. உங்கள் அதிர்ஷ்டம் அப்படி" என்றான்.

முதல் மூவரும் கடைசித் தம்பியை விடவில்லை. அவனை இழுத்துக் கொண்டு தம் தந்தை கூறியிருந்ததைக் கூட லட்சியம் செய்யாமல் அந்த வட்டார நீதிபதியிடம் போய் முறையிட்டார்கள்.

நீதிபதியும் அவர்கள் சொன்னதை எல்லாம் கவனமாகக் கேட்டார். பிறகு அவர்களிடம் "உங்கள் தந்தையின் சொத்து விவரம் கூறுங்கள்" என்றார். அவர்களும் "எம் தந்தை வியாபாரம் செய்தார். மாடுகள், வயல்கள், தங்கம் வெள்ளி என்று விட்டுப் போனார்" என்றார்கள்.

அப்போது நீதிபதி "உங்கள் தந்தை அவற்றைச் சரியாகவே பங்கிட்டுக் கொடுத்திருக்கிறார். உமி கிடைத்தவனுக்கு தானியம் வியாபாரம். சாணி கிடைத்தவனுக்கு மாடுகளும் மாட்டுப் பண்ணையும், மண் கிடைத்தவனுக்கு விவசாயம் செய்ய வயல்கள். நான்காவது மகனுக்குத் தங்கமும் வெள்ளியும் ரொக்கமும். இதுதான் உங்கள் தந்தையின் விருப்பம். இவற்றின்படி அவரவர்களுக்குக் கிடைத்ததை எடுத்துக் கொண்டு சுகமாக வாழுங்கள்" என்று தீர்ப்பு அளித்தார்.

அந்தத் தீர்ப்பு அவர்களுக்கு ஆச்சரியத்தையும் மகிழ்ச்சியையும் அளித்தது. தம் தந்தை எல்லோரையும் ஒன்றாக நினைத்து இப்படி ஏற்பாடு செய்தார் என்றும் தாம் எண்ணியது போலக் கடைசி மகனுக்குப் பாரபட்சம் காட்டவில்லை என்றும் புரிந்து கொண்டு ஒன்றாகவே வாழ்ந்து வந்தனர்.



**Statement about ownership of AMBULIMAMA (Tamil)**
**Rule 8 (From VI), Newspapers (Central) Rules, 1956**

| | |
|---|---|
| *1. Place of Publication* | 'CHANDAMAMA BUILDINGS'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *2. Periodicity of Publication* | MONTHLY<br>Ist of each calender month |
| *3. Printer's Name* | B.V. REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | Prasad Process Private Limited<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *4. Publisher's Name* | B.VISWANATHA REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | Chandamama Publications<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *5. Editor's Name* | B.NAGI REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | 'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *6. Name and Address of individuals who own the paper* | CHANDAMAMA PUBLICATIONS<br>PARTNERS:<br>1. Sri B. VENKATRAMA REDDY<br>2. Sri B.V. NARESH REDDY<br>3. Sri B.V. SANJAY REDDY<br>4. Sri B.V. SHARATH REDDY<br>5. Smt. B. PADMAVATHI<br>6. Sri B.N. RAJESH REDDY<br>7. Smt. B. VASUNDHARA<br>8. Kum. B.L. ARCHANA<br>9. Kum. B.L. ARADHANA<br><br>'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |

I, B Viswanatha Reddi, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

**B. VISWANATHA REDDI**
*Signature of the Publisher*

Ist March 1995

# போட்டோ வாக்கியப் போட்டி : : பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1995 மே மாத இதழில் வெளியிடப்படும்**



Taji Prasad



Taji Prasad

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ மார்ச் 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600026**

---

## ஜனவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **பசி இல்லாவிட்டால் இது தேவை இல்லை.**

இரண்டாவது போட்டோ : **பலம் இல்லாவிட்டால் இங்கு வேலை இல்லை.**

பரிசு பெற்றவர் : **கே. வெங்கடேசன், வேலூர்-4.**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா




அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள்
அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ் அல்லது தெலுங்கு

தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும்
உணரச் செய்யும்

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 117.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 264.00

பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள
நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 123.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 264.00

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ்
என எழுதி

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்